# செந்தமிழ்ச் செல்வி

## பொன் விழா ஆண்டு

தமிழ்மொழி, இனம், நாடு
இவற்றின் முன்னேற்றத்தைக்
குறிக்கோளாகக் கொண்டு
நடைபெற்றுவரும்
இத் திங்கள் வெளியீட்டின்
ஐம்பதாவது சிலம்பு

நான்காவது பரல்

சிலம்பு-ரு0] வள்ளுவர் ஆண்டு உ00௬, கார்த்திகை (Dec'75) [பரல்-ச

---

## உள்ளுறை



---

செந்தமிழ்ச் செல்வி

திங்கள் வெளியீடு

| சிலம்பு ருo | திருவள்ளுவர் ஆண்டு உooசு, கார்த்திகை டிசம்பர் 1975 | பரல் ச |
|---|---|---|

# இலங்கையில் மறைமலையடிகளாரோடு அறுபது நாள்கள்

கழகத்தை நிறுவிய என் அருமைத் தமையனாரும் அடிகளார் திருமகள், தனித்தமிழ்த் திருவாட்டி நீலாம்பிகையாரை 1927இல் மணந்தவருமான திருவாளர் திருவரங்கனார், கொழும்பு நகரில் திருநெல்வேலி மாவட்டச் சைவ வேளாளர் நடத்திவந்த பெரிய வணிகநிலையத்தில் 1906 முதல் பணிபுரிந்து வந்தனர். மறைமலையடிகளாரை முதற்கண் 1914 இலும் அடுத்து 1917 இலும் சொற்பொழிவாற்றும்பொருட்டு இலங்கைக்கு வரவழைத்தனர். அடிகளார் இரண்டாம்முறை கொழும்பைச் சேர்ந்தது 1917 மே 23ஆம் நாளாகும்.

என் தமையனாருடைய உயிரனைய நண்பர் பெருந்திரு ரா. ம. ப. செந்திலாறுமுகம் பிள்ளை அவர்கள் தம் தம்பியாரின் திருமணத்தின் பொருட்டுக் குலசேகரன்பட்டினத்துக்கு 25—5—1917 இல் புறப்பட்டுப் போனமையால் தாம் கொழும்பில் குடியிருந்த இல்லத்தையும் தஞ் சமையற்காரரையும் கொடுத்து அடிகளார் தங்குவதற்கும் தமது வழக்கப்படி உண்ணுவதற்கும் ஏற்பாடு செய்திருந்தனர்.

யான் லண்டன் மருத்துவப் புகுமுகத்தேர்வு எழுதும் பொருட்டுக் கொழும்புக்கு 27—5—1917 இல் போய்ச் சேர்ந்த போது அடிகளாரோடு தங்கியிருக்கும் நல்வாய்ப்பினைப் பெற்றேன். அந்த வாய்ப்பு என்னை மருத்துவத்துறைக்குச் செல்லவிடாது தடுத்துப் பதிப்புத்துறையிற் புகுத்திப் புகழ்மிக்க பணிபுரிய நல்கியது என்று சொன்னால் அது மிகையாகாது.

அடிகளார் அங்கிருந்தபோது சில நாள்கள் பெரும் புலவர்கள், பெருமக்கள் முதலியோர் அடிகளாரைக் காணவும், சில நுண்பொருள்களைப்பற்றி உசாவித் தெளிவுபெறவும் வருவதுண்டு. அப்படி வந்தவர்களில் பண்டித மயில்வாகனனாரும் (பிற்காலத்தில் விபுலானந்த அடிகளாக விளங்கியவர்) அவர்தம் நண்பரும் சட்டக் கல்லூரியில் பயின்று வந்தவருமான தெல்லிப் பழை கே. எசு. கனகராயரும் மிகவுஞ் சிறப்புற்றவர்கள்.

அங்குள்ள சமரச சன்மார்க்க சங்கத்தின் முதலாண்டுக் கூட்டத்துக்கு அடிகளார் தலைவராகவும், திரு. கனகராயர் செயலராகவும் இருந்தனர். 20—6—1917 முதல் மூன்று நாள்கள் சங்கவிழாவிலே அடிகளார் சொற்பொழிவாற்றி மக்களைக் கிளர்ச்சியுறச் செய்தனர்.

கொழும்பில் அறுப்பு ஆலை (Sawing Mill) நடத்திவந்த செட்டிநாட்டைச் சேர்ந்த உயர்திரு. கே. இராமநாதன் செட்டியாரவர்கள் இடையிடையே அடிகளாரிடம் வந்து உரையாடுவார். வெள்ளவத்தையிலுள்ள தமது மாளிகைக்கு அடிகளாரை அழைப்பித்து விருந்து அளித்தனர். சில புத்தர் கோயில்களுக்கு அழைத்துச் சென்றனர். அப்போதெல்லாம் யான் உடன் இருப்பதும், உடன் செல்வதுமுண்டு.

27—5—1917 இல் தம்பையா சத்திரத்தில் 'உமா மகேசுவரம்' என்னும் பொருள்பற்றி ஆற்றிய சொற்பொழிவே முதலாவதாகும். 18—6—1917 இல் சிந்துப்பட்டி நாடக அரங்கில் 'இறைவன் உயிர்களில் பாலில் வெண்ணெய்போல் இரண்டறக் கலந்து விளங்குகிறான்' (The Immanence of God in Souls) என்னும் பொருள்பற்றிப் பேசினர். அடுத்துப் பேசியது 1—7—1917 இல் 'அப்பூதி அடிகள்' என்னும் பொருள் பற்றியது.

இலங்கைக்கே பெரும்புகழ் ஈட்டித்தந்த யாழ்ப்பாணப் பெருந்தமிழர் சர். பொன்னம்பலம் இராமநாதன் அவர்களின் தம்பியார் சர். பொன்னம்பலம் அருணாசலம் அவர்கள் தலைமையில் பொதுநலமன்ற (Public Hall) த்தில் 'சிவமும் தமிழும்' என்னும் பொருள்பற்றி 5-7-1917 இல் அடிகளார் கேட்டார்ப் பிணிக்குந் தகையவாய்ப் பேசினர். மன்றத்திலே உயர்குடும்ப ஆடவரும், பெண்டிரும் நிரம்பி யிருந்து சொற்பொழிவைக் கேட்டுப் பெருமகிழ்வுற்றனர். பின் சிந்துப்பட்டி நாடக அரங்கில் 11—7—17 இல் 'அன்பு' என்னும் பொருள் பற்றியும், 16—7—17 இல் 'திருக்கோயில் வழிபாடு', என்னும் பொருள் பற்றியும், 23—7—17 இல் 'பிறவிப் பயன்' என்னும் பொருள்பற்றியும் பேசி மக்கள் உள்ளங்களைப் பெரிதுங் கவர்ந்தனர். சொற்பொழிவுக்கு வரும் யாழ்ப்பாணத் தமிழ்மக்கள் தலையில் தொப்பியோடு, கால்சட்டை

காலணிகளுடன் வருவதைக் கண்டு ஒருமுறை அடிகளார் சமயச் சொற்பொழிவுகளைக் கேட்கவருபவர் தூயவேட்டி கட்டி, நெற்றியில் திருநீறும் பொட்டும் அணிந்து வருதல் வேண்டுமென்று அன்புள்ளத்தோடு சொன்னார்கள். அடுத்த கூட்டத்துக்கு வந்தவர் அனைவரும் அடிகளார் விரும்பியபடி அரங்கிலே காட்சியளித்தமை எல்லோருக்கும் பேருவகையளித்தது.

அடிகளார் தமது ஊருக்குத் திரும்புமுன் சைவ வேளாள வணிகப் பெருமக்கள் சிலர் தத்தம் இல்லங்கட்கு அடிகளாரைப் பேரன்போடு அழைத்து விருந்தளித்து அடிவணங்கிக் காணிக்கை வழங்கி வாழ்த்துப் பெற்றனர். அடிகளாரிடம் சிலர் உரையாடியதனால் புலாலுணவு நீத்தனர். மாயாவாதக் கொள்கையிலே இருந்தவர் அதனைவிட்டுச் சைவசித்தாந்தக் கொள்கையினைக் கடைப்பிடித்தனர்.

அடிகளார் கொழும்பில் தங்கியிருந்தபோது அடிக்கடி பணப் பேற்றஞ்ச (V. P. P.)வில் இந்தியாவிலிருந்து புத்தகங்கள் வந்துகொண்டிருக்கும். அங்கிருந்து இந்தியாவிலுள்ள தம் இல்லத்துக்கும், மாணாக்கர்கட்கும், நண்பர்கட்கும் எழுதுங் கடிதங்களை எல்லாம் தம் கைப்படவே அழகாக எழுதுவர். தமது அறிவுக்கடல் இதழுக்குக் கட்டுரைகள் எழுதியனுப்புவர். சிலர் அடிகளாரிடம் மந்திரமொழி கேட்டும் சிலர் அறிவுறுத்தல்களைப் பெற்றும் நன்மாணாக்கராயினர். அடிகளார் 2-8-1917 இல் கொழும்பிலிருந்து புறப்பட்டு 4-8-1917இல் பல்லாவரம் நலமே வந்து சேர்ந்தனர்,

அடிகளார் தம் சொற்பொழிவை இரண்டு மணி நேரத்துக்கு ஒழுங்குபடுத்திக்கொள்வர். சொற்பொழிவாற்ற எழுந்து நிற்பதும், இருகைகளையும் எடுத்து ஆட்டிப் பேசுவதும் அழகொழுகுவனவாயிருக்கும். மேற்கோளாக எடுத்தாளும் பாடல்களை இசையோடு பாடி இன்புறுத்துவர். ஆங்கில நூல்களிலிருந்து பொருத்தமான மேற்கோள்களை எடுத்து மொழிவது மகிழ்ச்சியூட்டுவதாகும். இறுதியில் தாம் பேசியதன் கருத்துக்களைத் தொகுத்து நிரல்படக் கூறுவது கேட்டவர்கட்குத் தெளிவூட்டுவதாகும். இதனை ஆங்கிலத்தில் 'Synopsis' என்பர். அடிகளாரின் மேனி அழகும், குரல் அழகும், எழுத்து அழகும், செய்கைகளிலெல்லாம் அமைந்த அழகும் காண்பவர், கேட்பவர் உள்ளங்களைக் கவர்ந்தன. அடிகளாரோடு யான் தங்கியிருந்து பெற்ற பேற்றினை மகிழ்வோடு இங்கே கூறியுள்ளேன்.

வ. சு.



# மறைத்திரு மறைமலையடிகளார் வரலாற்று மாட்சி

*மாணவர், திருக்குறள்பீடம் குருகுலம்*

**அழகரடிகள் (இளவழகனர்)**

## 4. இயல்பு நலம்

தமிழ் மொழியைத் தாய் மொழியாகக் கொண்ட இத் தென்னாட்டில் அடிகளார் தோன்றியதனால், அவர்களுக்கும் தாய் மொழி தமிழாயிற்று.

தாய் மொழியாகிய தமிழைப் பயில்வார் அரியராய் இருந்த காலத்தில் அடிகள் தோன்றியிருந்தும், இந் நாட்டின் இயற்கை மொழியாகிய அதனையும் இயற்கை நெறியாகிய சிவநெறிக் கோட்பாடுகளையும் அடிகள் நன்கு பயின்றனர்; இரண்டிலும் புலமை, மிக உயர்வாக அமைந்துவிட்டது.

உயர்வுக்குக் காரணம், இந் நாட்டின் இயல்பு மொழி தமிழ் என்பது ஒன்று; அல்லாமலும், இயல்பு நலம் அடிகளிடம் சிறந்திருந்தமை மற்றொன்று. மேலும், இவ் வியல்பு நலம் நன்கு சிறக்கும்படி, பகுத்தறிவு மாட்சியும் ஆராய்ச்சியும் அமைந்த ஆங்கில மொழியறிவும் அதனில் உயர்ந்த நூற் பயிற்சியும் இயற்கை நேர்வாக அடிகளுக்கு இனிதமைந்து விட்டன. பிறவியே, அடிகளுக்குக் கடவுளின் இயற்கை வழியில் அமைந்தது; அதனால், எம் முகத்திலும் இயல்பு நலமே தாண்டவமாடியது.

**இயற்கையும், செயற்கையும் :**

இயற்கை நெறியை 'உண்மை நெறி' எனலாம்; 'தெய்வ நெறி' என்றும் இதனைச் சொல்வதுண்டு.

'அப்பன்,' 'அம்மை' என்னும் தெய்வப் பகுதிகள் இரண்டில் அப்பன் என்பது தூய இயற்கை நிலை; தூய இன்ப நிலை அல்லது விடுபேற்று நிலை.

'ஈசனவன் எவ்வுயிர்க்கும் இயல்பானான் சாழலோ'

என்பது திருவாசகம்.

அம்மை என்பது, அவ் வியற்கையோடு ஒட்டிய அருட் செயற்கை நிலை; அஃது இருவகை: உயிர்களுக்காக நிகழும் ஐவகை நடனம் என்பது (உலகப் படைப்பு, காப்பு முதலியன) ஒன்று; படைத்த இயற்கை யுலகத்தில் அம்மை அங்கங்கும்

மறைப்பம்மையாய் அமர்ந்து, உயிரறிவு உயிருணர்வுகளை அவற்றிற் பதியும்படி செய்து, ஈர்த்து ஆட்கொள்ளும் ஆற்றல் நிலை, அழகு நிலைகள் மற்றொன்று.

> "நம்மையும் ஓர் பொருளாக்கி நாய்சிவிகை ஏற்றுவித்த
> அம்மை எனக்கு அருளியவா றார்பெறுவார் அச்சோவே"

என்றார் மாணிக்க வாசகரும்.

இயற்கையோடு ஒட்டிய இந்த இரண்டாவது அருட் செய்கை நிலையைத்தான், 'உலகியற்கை' 'மக்களியற்கை' என்று பாராட்டுகிறோம். அம்மையின் இந்த இரண்டாவது நிலையே நமக்கெதிரிற் காணப்படும் உலகம்;

மறைப்பம்மையாக விளங்கும் இந்தக் கவர்ச்சிகளை அவற் றின் அழகியல்படி எடுத்து விளக்குவனவே கலைநூல்கள்; விளக்குவோர், உயர்ந்த புலவர்கள்; ஆதலால், இந்த இரு வகை இயற்கைகளே (அப்பன் இயற்கையும் அம்மையின் இரு வகைச் செயற்கைகளும்) அடியார்களுக்கு ஊற்று. இந்த ஊற்று வடிக்கப்படாமல் வெளிவரும் நூல்கள் உண்மை நூல் களாகா.

அம்மையின் இரண்டாவது செயற்கை எனப்படும் உல கியற்கையின் வழியே மக்களின் வாழ்க்கை நிகழவேண்டும். அது செயற்கையிற் செயற்கை எனப்படும். இச் செயற்கை நெறி என்பது, அந்தத் தெய்வ இயற்கை செயற்கைகளின் வழியே அமையும் மக்கள் கடமைகள். இதனைத்தான் புலவர் களுக்கு அமைய வேண்டிய 'இயல்பு நலம்' என்கிறோம்.

இவ்வேறுபாடுகளை இனிது தெளிந்து கொண்டால், புலவர் கள், மக்களுயிர்களில், அருமைகளோடு குலாவும் 'தெய்வப் பெற்றி'யினர் என்பதும், மக்களுள் 'முன்னணியினர்' என் பதும், 'வழிகாட்டிகள்' என்பதும், ஏனை அனைவரும் அவர்களைப் பின்பற்றியே உய்ய வேண்டுமென்பதும், அவர்களுள்ளும் சிறந்தார் சமய குரவர் போலும் அடியார்கள் என்பதும், எளிதில் உணரலாம்.

இயல்பு நலம் வேறாகவும் மக்கள் செயல் வேறாகவும் ஒட்டா மல் நடந்தால் வாழ்க்கை மேம்படாது; அடிகளார் வாழ்க்கை அத்தகையதன்று; தெய்வ இயற்கை செயற்கைகளோடு ஒட்டிய வாழ்க்கையாய் வெற்றி மிக்கது!

அடிகளுக்கு இளமையிலேயே இந்த இயல்பு நலம் நன்கு அமைந்து விட்டதனால், அவர்கள் நூல்களெல்லாம் பேச்சுக்க ளெல்லாம் இயல்பு வழியிலேயே சிறந்து நின்றன. சங்க இலக் கியங்களில் அடிகள் உள்ளம் சென்றதற்கு முக்கிய காரணம்,

இந்த இயல்புநலம் அந்த இலக்கியங்களில் வாய்ப்பாக அமைந்திருந்தமையே!

சங்க நூல் இயல்பு:

சங்க இலக்கியங்கள் அவற்றின் இலக்கணங்கள் எல்லாம் இயற்கை நலத்தை அடிப்படையாகக் கொண்டு மக்கள் செயல்களாக வெளிவந்தவை!

பத்துப் பாட்டில், 'நெடுநல் வாடை' ஒரு பாட்டு: நக்கீரனார் இயற்றியது.

> "ஆறு கிடந்தன்ன அகல் நெடுந் தெரு" (30)

என்று அதில் ஒருவரி காணப்படுகிறது. அகன்ற தெரு ஆறு போல நீண்டு கிடக்கிறதாம்; எத்துணை இயல்பான உவமையோடு கூடி இந்த வண்ணனை வாய்ந்துள்ளது!

'சிறுபாணாற்றுப்படை'யில் நிலத்தின் ஐவகைப் பகுப்புகளும், அவற்றின் இயற்கை அமைப்புகள் நன்கு விளங்க, அதன் ஆசிரியர் இடைக்கழி நாட்டு நல்லூர் நத்தத்தனார் பாடுதலும் இங்கு நினைவுகூர்தற்குரியது.

அன்றியும், 'நெடுநல்வாடைப்'பாட்டில் கூதிர்க்காலமும் அதில் வீசும் வாடைக் காற்றும் பற்றிய இயல்பு இனிது ஓதப்படுகின்றது.

பத்துப்பாட்டில் 'குறிஞ்சிப் பாட்டு' என்பது ஒன்று. இரவில் மலர்கின்ற பூ (இருள்வாசி—இரு வாட்சிப் பூ) "நள்ளிருள் நாறி" (94)
என்றே அதன் இயல்பு தோன்ற உரைக்கப்பட்டுள்ளது.

'சிறுபாணில்' யானையைப் பற்றி ஒரு கூற்று:

> "பொழிகவுள் தறுகண் பூட்கைத் தயங்குமணி மருங்கின்
> சிறுகண் யானை"

என்று வருகின்றது. 'யானையின் கதுப்பில் மதம் வீழ்கிறது; யானை அஞ்சுதற்குரிய குணம் படைத்தது. இருபக்கமும் மணிகள் அசைந்துகொண்டிருக்கின்றன; சிறிய கண்களையுடையது;' என்பது அவ்வரிகளின் பொருள். யானையை நேரிற் பார்த்தாலும் இவ் வரிகளின் கருத்து அப்படியே அதன் இயல்பு தோன்ற இருக்கும்.

இங்ஙனம், அறிவில் பொருள்களின் இயல்புகளும் சிற்றுயிர்களின் இயல்புகளுமட்டுமன்றி, மாந்தர் பல வகையினரின் இயல்புகளும் சங்க இலக்கியங்களில் அங்கங்கும் வருதலை உற்றுநோக்கலாம்.

வீரப் புதல்வன் ஒருவனைப் பற்றி அவன் தாய் கூறுவதாகப் 'புறநானூ'ற்றில் (86) ஒரு பாடல் உண்டு. 'காவற் பெண்டு' என்னும் நங்கையார், கேள்வியும் விடையுமாகத் தாமே இயற்றியது :

> "சிற்றில் நற்றூண் பற்றி நின்மகன்
> யாண்டுளனோ என வினவுதி"

என்பது கேள்வி; அதற்கு விடையாக,

> "என் மகன்
> யாண்டுள னாயினும் அறியேன்"

என்று மறுமொழி கூறிவிட்டு, அதனை அடுத்துத் தனக்குத் தெரிந்த உண்மை.

> "ஓரும்,
> புலிசேர்ந்து போகிய கல்அளை போல
> ஈன்ற வயிறோ இதுவே"

என்பதுதான் என்று தெரிவித்து,

> "தோன்றுவன் மாதோ போர்க்களத் தானே"

என்று தன் வீரமகன் வழக்கத்தையும் அவர் அறிவிக்கிறார். இப் பாடலின் இயல்பு நலம், உள்ளது உள்ளவாறே கூறும் முறைகளிலிருந்து இனிது புலப்படும். இயல்புக்கு மாறானது இதில் யாதுமில்லை.

அதே நேரத்தில், தூணைப் பிடித்து நிற்கும் மாதர் இயல்பும், புலி கிடந்து போன மலைக்குகைபோலத் தன் வயிற்றில் மகன் தோன்றிய நிலை ஒன்றே திண்ணமாய்த் தனக்குத் தெரிந்த உண்மை என்னும் இயல்பும், மகனைப் புலியென்று வீர மொழியால் உயர்த்துரைத்த இயல்பும், அதற் கேற்பத் தன் வயிற்றை ஒரு மலைக்குகைபோல உவமைப் படுத்திக்கொண்ட இயல்பும், போர்க்களத்தில் நாடு காக்கும் நோக்கத்தில் போய்ப் பொருவது அவன் வழக்கமாதலின் பெரும் பாலும் அக் களத்திற்போய்ப் பார்த்தால் காணப்படுவான் என அவன் வீர இயல்பும், சில வரிகளில் 'மாதர் வழக்கம்' 'அழகிய உவமை' 'புதல்வனின் தன்னல இழப்பு' 'அஞ்சாத் தறுகண்' முதலிய பல கருத்துக்களும் அவ்வம்மை கூறியிருக்கிறார்.

தொடுமிடந்தோறும் இங்ஙனம் இயற்கை நெறி செல்லும் மெய்நலமே சங்க இலக்கியங்களில் தோன்றும். இதுவே அவற்றின் சுவை முறை.

ஆசிரியர் மறைமலையடிகள் இயல்பாகவே இயற்கை நெறி நாடிய உள்ளம் உடையவராதலின், பொய்யாச் செந்நாவின

ரான சங்கச் சான்றோரின் இயல்பு நலம் அவர்க்கு மிகவும் பிடிப்புடையதாயிற்று.

> "உயர்நிலை உலகம் அமுதொடு பெறினும்
> பொய்சேண் நீங்கிய வாய்நட்பு"

'மதுரைக் காஞ்சி'யில் (197—98) பேசப்படுகின்றது.

'முற்கால பிற்காலத் தமிழ்ப் புலவோர்' என்னும் நூலொன்றை அடிகள் இயற்றியிருக்கின்றார். அடிகளின் இயற்கை உணர்ச்சிகளும் சங்கச் சான்றோர் நூல் நெறிகளும் அதனில் நன்கு வெளிப்படுகின்றன. அவற்றிற் சில வருமாறு:

> "பிற்காலத் தமிழ்ப் புலவரிற் பெரும்பாலார், பண்டைத் தமிழாசிரியரும் அவர்க்குப் பின் இடைக் காலத்தே வந்த தமிழாசிரியரும் செந்தமிழ் மொழியை இயற்கைச் சொற்பொருள் வகையிற் பேணியவாறுபோற் பேணாது, அவரொடு திறம்பிச் செயற்கைச் சொற்பொருட் குறுநெறியே புகுந்து அதனொளியையும் வனப்பையுங் குறைத்து அதனைக் குற்றுயிருங் கொலையுயிருமாய் வலிவிழந்து கிடக்கச் செய்தனர்."

> "முற்காலத்துப் புலவர்கள் இயற்கைத் தோற்றங்களையேனும் மக்கள் இயல்புகளையேனும் பாடப் புகுந்தால், உண்மைக்கு மாறாகாமல், ஓவியம் வரைந்து காட்டினாற் போல் அவைதம்மை நம் அகக்கண்ணெதிரே விளங்கக் காட்டுவர். அவர் பாடிய தோற்றங்களையும் மாந்தர்தம் நிலைகளையும் நாம் நேரே சென்று காண்டல் கூடுமாயின், அவை அவர் பாடியவாறே யிருக்கக் கண்டு வியப்பும் மகிழ்ச்சியும் எய்துவம். அவர் பாடியவெல்லாம் அங்ஙனம் பட்டாங்கு மொழியும் பெற்றிய"

> "சில சொல்லிற் பல பொருட்டோற்றமும், உலக இயற்கை மக்களியற்கையில் உள்ளவாறே, எழில் கெழும எழுதிக் காட்டும் பேரறிவாற்றல் பண்டை நல்லிசைப் புலவரெல்லார்மாட்டும் வீறி விளங்காநிற்கின்றது"

> "பண்டைச் செந்தமிழ்ப் புலவரேயன்றி, இடைக் காலத்து வந்த தமிழ்ச் சான்றோரும் உலக இயற்கை மக்களியற்கையை அவையிற்றின் உண்மைக்கு மாறாகாமலே ஓவியத்தில் வரைந்து காட்டுவதுபோற் காட்டி அரும்பெருஞ் செய்யுட்கள் இயற்றி வந்தனர். இதற்கு, மணிமொழிப் பெருமான் அருளிச் செய்த 'திருச்சிற்றம்பலக் கோவையார்' என்னுந் தமிழ்த்தேன் நிறைந்த பொலன் குடத்திருந்து ஒரு நறுந் திவலையினை எடுத்து ஈண்டு நுஞ் செவிவாய்ப் பெய்குதும்:

"ஈவினை யாட நறவினை வோர்ந்தெமர் மால்பியற்றும்
வேய்வினை யாடுவெற்பா! உற்று நோக்கிஎம் மெல்லியலைப்
போய்வினை யாடல்என் ருள்அன்னை; அம்பலத் தான்புரத்தில்
தீவினை யாடவின் றேவினை யாடி திருமலைக்கே"

"பிற்காலத்துத் தோன்றிய பொருட்டொடர் நிலையிற் பெரும்பாலன, இலக்கியச் சுவை பயில்வார்க்கு இன்பம் பயத்தலின் அதுபற்றி அவை பாராட்டற் பாலன அல்லவோ வெனின், அல்ல. அந் நூல்களை ஆக்கிய புலவர்கள் மெய் இவை பொய் இவை என்று ஆராய்ந் துரைத்தவர் அல்லர்" எடுத்துக்காட்டு:

"வேழம் வீழ்த்த விழுத்தொடைப் பகழி
பேழ்வாய் உழுவையைப் பெரும்பிறிது உறீஇப்,
புழற்றலைப் புகர்க்கலை உருட்டி, உரற்றலைக்
கேழற் பன்றி விழ, அயலது
ஆழற் புற்றத்து உடும்பிற் செற்றும்
வல்வில் வேட்டம் வலம்படுத் திருந்தோன்"      (புறம், 152)

இதில் வன்பரணர் என்னும் புலவர் பெருமான் வல்வில் ஓரி என்னும் தலைவனின் வில்லாண்மையை விளக்குகின்ருர்.

'யானையை வீழ்த்த அம்பு, புலியை ஊடுருவி, மான் கலையைக் கீழே உருட்டிக், காட்டுப் பன்றியைத் தரையில் விழும் படி செய்து, அடுத்திருந்த ஒரு புற்றில் போய் உடும்பின் உடம்பில் பட்டு நின்றது' என்னும் கருத்து வருகின்றது. அம்பின் துரிதம் வரவரக் குறையும்; அதுபோல யானையையும், யானையினும் சிறியதாகிய உழுவையையும், அதனினும் சிறி தாகிய கலைமானையும், அதனின் சிறிதாகிய பன்றியையும், அதனின் சிறிதாகிய உடும்பையும், முறையே வீழ்த்தியும் ஊடுருவியும் உருட்டியும் தள்ளியும் செற்றும் சென்ற இயற்கை அழகு எடுத்துக் காட்டப்படுகிறது.

இதனுடன் கம்பராமாயணத்தில் வருகின்ற இராமனது வில் தொழிலாண்மையினையும் அடிகள் ஒப்பிட்டுக் காட்டுகிருர். இராம காதையின் இரண்டு செய்யுட் பகுதிகள் இவை:

"உலையுருவக் கனல்உமிழ்கண் தாடகைதன் உரம்உருவி
மலையுருவி மரம்உருவி மண் உருவிற்று ஒருவாளி"
(பால. குலமுறை, 26)

"ஏழு மாமரம் உருவிக்கீழ் உலகமென்று இசைக்கும்
ஏழும் ஊடுபுக் குருவிப்பின் உடன்அடுத்து இயன்ற
ஏழுஇ லாமையான் மீண்டதுஅவ் விராகவன் வாளி."
(கிட்கிந், மரா, 138)

'இராமனது அம்பு, விசை குறையாதது; அதனுல், தாடகையின் மார்பை உருவி, அதன்பின் மலை உருவி, மண்ணும் உருவிற்று; மேலும், ஏழு மாமரம் உருவி, பாதாள உலகம் ஏழும் ஊடுருவி, அடுத்தபடி உருவுவதற்கு ஏழு இல்லாமையால் அம்பு மீண்டு விட்டது !'

இதைப் பற்றி அடிகளார், 'இஃது எத்துணைப் பொய்ம்மை நிறைந்ததாய் இருக்கின்றதென்பதனைக் கருதி, அருவருப்புக் கொள்கின்ருர். இராமன் ஏவிய அம்பு, தாடகையின் மார்பைத் துளைத்திருக்கலாம்; அதன் பின் தாடகையினும் பெரிய மலையையும் துளைத்தது என்றதும், பல மரங்களைத் துளைத்தது என்றதும், நிலத்தைத் துளைத்தது என்றதும், பெரும் பொய்யாயிருக்கின்றன.

அதனையும் அடுத்து ஏழு மராமரங்களைத் துளைத்த தென்பதும், பாதாள உலகம் ஏழும் துளைத்த தென்பதும், திரும்பி வந்ததென்பதும் இயற்கைக்கு எவ்வளவு மாருயிருக்கின்றன!

ஊன் உடம்புகளைத் துளைக்கும் ஓரியின் வில்லாண்மையின் இயல்பு நலத்துக்கு, ஊனுடம்பு மட்டுமன்றி மலை, மரம், மண், பாதாளம் ஏழு எல்லாம் துளைத்ததோடு விசை குறையாமல் திரும்பியும் வந்தது என்னும் இராமனின் வில்லாண்மைப் போக்கு எவ்வளவு நடக்கக் கூடாத செயற்கையா யிருக்கிறது' என்பது அடிகளார் கருத்து.

> "இப் பிற்கால மொழி பெயர்ப்பு நூல்களிலும் ஒரோவிடங்களில் இலக்கியச் சுவை காணப்படுமேனும், முதலிலிருந்து முடிவுவரையில் அவற்றின்கட் பொய்யாவனவே தொடுக்கப்பட்டிருத்தலால், அவற்றின் பயிற்சி மக்கட்கு மெய்யுணர்வினையும் மெய்யறிவு விளக்கத்தினையுந் தராது."

> "இவ் வுயர்வு நவிற்சி நினைக்குந்தொறும் நமக்குப் பேரா வெறுப்பினையே விளைக்கின்றது."

> "ஒருவனது வலிவை, ஒரு பொருணிகழ்ச்சியைச் சிறப்பிக்க 'உயர்வு நவிற்சி' சொல்லுங்கால், இங்ஙனம் இயற்கைக்கு முழு மாறுபாடுண்டாகச் சொல்லுவது நல்லிசைப் புலமையாகுமா ?"

> "பண்டைத் தமிழாசிரியரது மெய் வழக்கிலேயே பழகினர்க்கு உவர்ப்பினையும் வருத்தத்தினையுந் தராதொழியுமோ?"

என்று இங்ஙனமெல்லாம் சங்க இலக்கியங்களின் இயல்பு களில் மிகப் பழகிய அடிகளாரின் இயல்பு நலச் சிறப்பு, இவ் வாற்ருற் பெரிதும் விளங்குகின்றது.

அருளொழுக்கம் :

சங்க இலக்கியங்களில் அருளொழுக்கத்துக்கு மாருன புலால் உண்ணும் பழக்கங்கள் செயற்கை முறையாகச் சில வருதலையும் இங்கே எண்ணிப் பார்க்கவேண்டும்.

ஓரறிவு புல்பூண்டு, மரம், செடி, கொடி வகைகள் எல்லாம் உலகத்தில் இயல்பாகக் காணப்படுகின்றன. இயற்கையின் வழியே வளர்கின்றன. பழங்கள் பழங்களின் விதைகள் எல் லாம் இயல்பு நலத்தை வகையாக மேற்கொண்டிருப்பதனுல் அவை மற்ற உயிரினங்களுக்கெல்லாம் இயல்பாகக் கிடைக்கும் வாழ்க்கைப் பேறுகளாய் உதவுகின்றன. ஊன் உண்ணும் மக்களுக்கும் ஓரறிவு உயிர்களாகிய செடிகொடி வகைகள் உதவாமல் இல்லை.

மக்கள் செயல்கள் இங்ஙனம் அமைந்த இயல்பு நலத் தோடு ஒத்திருப்பதானுல், அவர்களும் ஊன் உண்ண மாட்டார்கள்.

இயற்கை உணவு நெறி இவ்வாறு இருப்பதனுல், மக்கள் செயற்கையும் ஊன் நீக்குதலாய் இருக்க வேண்டுமென்று, வாழ்க்கை மறை அருளிய திருவள்ளுவர் 'புலால் மறுத்த'லை வற் புறுத்தினர். பிற்கால வள்ளலாரும் ஊன் உண்ணுதவர்களையே, இயற்கையின் வழி, 'அக இனத்தார்' என்று சாதி பிரித்துக் கொண்டார்.

பழைய நான்மறையாகிய திருக்குறளும் புதிய திருவருட் பாவும், இங்ஙனம் இயல்பு நலம் மேம்பட்டிருப்பதனுல், அந் நலம் மிக்கவராகிய அடிகளுக்கும் ஊன் உண்ணு அருள் ஒழுக் கமே வாழ்க்கையில் சிறப்பதாயிற்று.

மேற்காட்டிய நூல்களல்லாமல், சங்க இலக்கியங்களும், ஊன் உண்ண வேண்டுமென்று கூறவில்லை.

அக் காலத்துப் புலனழுக்கற்ற அந்தணுளராகிய கபிலர் முதலிய சான்ருேர் ஊன் உண்டு பழகியவரே யாயினும், மக்கள் ஊன் உண்ண வேண்டுமென்று அவர் பேசியதில்லை. அவர் காலத்திலேயே சங்கச் சான்ருேர் பலர், தம் வாழ்க்கை யில் ஊன் உண்ணுது புலால் மறுத்து மிருக்கின்றனர். 'ஊன்' என்றும் 'உணவு' என்றும் சங்க நூல்கள் வேறு பிரித்தே பேசி யிருக்கின்றன.

"ஊனும் ஊனும் முனைஇ"

என்று சிற்றுயிர்களுக்கும் உணவு வேறென்று குறிப்பு வருகின்றது. அது கொண்டும், புலால் மறுப்பு, சங்க காலத்திலும் இருந்தமை தெளியலாம்.

இயற்கையோடு ஒட்டிய இச் செயற்கைத்திறம் சங்க நூற்பயிற்சியினல், அடிகளுக்குக், கெடாமல் கிட்டியது. காரணம், அவர்களுக்கு அமைந்த 'இயல்பு நலம்' என்றே கருத வேண்டும்.

'சமய ஒழுக்கம்' எல்லா மதங்களிடத்தும் புலால் மறுப்பதாயில்லை. 'சீவகாருணியம்' பற்றிப் புத்தமதம், இசுலாம், கிறித்துவம் முதலியன பேசுகின்றனவாயினும் சமண் மதத்தைப்போல் 'அருள் ஒழுக்கம்' மிக்கதென்று கூறுதற்கில்லை. ஆதலால், சமய ஒழுக்கத்தால் அடிகளுக்கு இப் புனித உணர்வு அமைந்ததென்று தீர்த்துச் சொல்வதற்கு இல்லை. அது குழந்தையாயிருக்கும்போதே அறிவறிந்து அமைவதும் அன்று. சமய ஒழுக்கமும் இயற்கை நிலையை ஒட்டியதே யன்றி வேறில்லை.

**நால் வகை இயற்கை நெறிகள் :**

கடவுள் ஒருவரே. மற்றவையெல்லாம் உயிரினங்கள்; ஆதலால் இயல்பு நெறி ஒரு முழுமுதற் கடவுளைத் தெளிவிக்கும்.

அப்படியானல், உயிரினங்களெல்லாம் ஒரு கடவுளின் குழந்தைகளாகின்றனர். ஓரறிவு உயிர் முதல் பிறப்பால் வடிவு வேறுபட்ட ஆறறிவு உயிர் வரையில் வகை வகையாகப் பிறந்திருக்கின்றன. இந்த இயற்கை வேறுபாட்டை "மீன் வாழ் சாதி" என்பது முதலாகக் கூறித் தொல்காப்பியர் முதல் எல்லாப் பெரியவர்களும் ஒப்புக்கொள்கிருர்கள்.

வடிவு வேறுபடாத இனங்களில் மக்கட் பிறவியைச் சேர்ந்தவர் மட்டும் அந்தணர், அரசர், வணிகர், உழவர் முதலாகத் தொழில்களாற் பிரிவுண்டிருக்கிருர்கள்; தொழிலாற் பிரிவு என்பதைச்

"சிறப்பொவ்வா செய்தொழில் வேற்றுமை யால்"

எனக் கூறித் திருவள்ளுவர் முதல் அனைவரும் ஒத்துக்கொள்கின்றனர்;

மற்றப்படி மக்களுக்குள் சாதி என்னும் பிரிவை, ஊனுண்பார், ஊனுண்ணுதார் என இரு வகையிலேயே வைத்து, 'அக இனத்தார்' 'புற இனத்தார்' என இருவகையில் இயற்கை அருளொழுக்க முறையே, வள்ளலார் வகுத்தோதுவார். "இட்டார் பெரியார் இடாதார் இழிகுலத்தார்" என்னும்

ஔவையார் வாக்கும் இயற்கை நெறியாகிய அருளொழுக்கமே குறிக்கின்றது. இவ்வெல்லாக் கருத்துக்களும் 'சைவம்' என்பதில் உள்ளன.

இனி இயற்கை நெறியில் அறிய வேண்டுவது இன்னொரு முக்கியக் கருத்தும் உண்டு; அஃது, ஆண் பெண் திருமணங்கூடி நிகழ்த்தும் இல்லறமாகும். அறிவுடைய எல்லா உயிர்ப் பகுப்பு களிலும் ஆண் பெண் உள்ளன; இயற்கையிற் காணப்படும் இப் பிரிவை, இயல்பு நலம் வாய்ந்த எவரும் அசட்டை செய்தல் இயலாது; புறத்துறவு இயற்கையோடு ஒட்டிய செய்கையாகாது. உள்ளத்தில் பற்று நீங்கியிருக்கும் இல்லறமே 'அறம்' என்று தெய்வத்திருவள்ளுவரால் சிறப்பாக எடுத்துக்கொள்ளப்பட்டது.

ஆகவே, (1) ஒரு முழுமுதற் கடவுள் வணக்கம் (2) உயிரினங்களெல்லாம் ஒரே ஆண்டவனின் பிள்ளைகளாய் உடற் பிறப்பாய் ஒத்து நிற்றல் (3) அக இனத்தார் புற இனத்தார் என்னும் அருளொழுக்க மன்பதைப் பகுப்பு (4) ஆண் பெண் இயைந்த இல்லறம் என்னும் நான்கு வகையும் முதன்மை கொண்ட இயற்கை நெறிகளாயின. இவை பெரியோர் கருத்து; இந்நால் வகையையும் ஆசிரியர் மறைமலையடிகளார், தம் வாழ்க்கை முறையில் பிடிப்பாய்க் கையாண்டு, இயல்பு நலத்தில் மேம்பட்டவர்களே என்பது வெளிப்படை!

இளமை வீறு: (50 வயது வரை)

திருமுருகாற்றுப்படையில் இளமைப் பருவம் 48 ஆண்டுகள் என்று வருகின்றது.

"அறுநான் கிரட்டி இளமை நல்யாண்டு" (179)

என்பது அதிற் காணப்படும்; அதற்கு உரையாசிரியர் நச்சினார்க் கினியர், "இருபத்து நான்கின் இரட்டியாகிய நாற்பத்தெட்டி யாண்டு நல்லிளமை" என்று உரை எழுதினர்.

அடிகள் மிக இளமையிலேயே தந்தையை இழந்து இறைவன் இயற்கை உணர்ச்சியோடு மேம்பட்டு வந்திருக் கிறார்கள். இயல்பு நலம் இவ்வாறு விளங்கி வந்திராவிட்டால், இந் நாட்டு இயல்பு மொழியாகிய தமிழிலும் இயல்பு நெறியாகிய சிவநெறியிலும் எண்ணம் சென்றிராது.

'மாயா வாத நூற்' பயிற்சியும் அடிகளார் உள்ளத்துக்குச் சுவைக்கவில்லை. காரணம், அது, இயல்பு நெறியன்று. அப் பயிற்சி மறுப்புக் கூறமட்டும் உதவியது. 'முதற்குறள் வாத நிராகரணம்' என்னும் மாயா வாத மறுப்பு நூலில் இயல்பு நலத்தின் அழகுகளை இனிது காணலாம்.

'முதற்குறள் வாத நிராகரணத்தின்' முதற்பகுதியில் இருபத்திரண்டு கருத்துக்களும், 'மாயா வாதம்' பற்றிய இரண்டாம் பகுதியில் பத்துக் கருத்துக்களும் மறுக்கப்பட்டிருக்கின்றன.

சென்னை சோமசுந்தர நாயகர் 'சித்தாந்த சேகரம்' என்னும் தமது நூலில் முதற்குறளைப் பற்றி ஒரு விளக்கம் எழுதினர். அதனை 'நாகை வாதி' என்பவர் 'சச்சன' இதழில் மறுத்து எழுதவே, அதற்கு ஒரு மறுப்பு 'நாகை நீலலோசனி' இதழில் அடிகளார், தெளிவு தரத்தக்க சான்றுகள் காட்டி நாயகர் கொள்கைகளை நிறுவினர். அதைக் கண்ட 'மாயா வாதி' ஒருவர், அடிகள் கருத்துக்கள் பொருந்தா எனக் கூறித் தாம் 'முதற்குறள் வாதம்' எனும் பெயரிட்டு ஒரு மறுப்பு விடுத்தார்: அதற்கு அடிகள் எழுதிய எதிர் மறுப்பே 'முதற்குறள் வாத நிராகரணம்' என்னும் மறுப்பு நூல்; அடிகளுக்கு அப்போது அகவை இருபது; இளமைக் காலத்திலேயே இம் மறுப்பு எழுதப்பட்டிருக்கிறது.

இம் மறுப்பை எழுதிய பின் 'நாகை வாதி' என்பவர் 1897 ஆம் ஆண்டின் பிப்பிரவரி 23இல் நாகை வெளிப்பாளையத்தில், யாழ்ப்பாணம் தில்லைநாத நாவலரைச் சூழ்ந்திருந்த அன்பர்கள் ஏறக்குறைய ஐம்பது பேர் முன்னிலையில், தாம் மறுப்பு எழுதிய குற்றத்தைத் தாமே ஒப்புக் கொண்டதாக ஒரு குறிப்பிருத்தலின், அடிகளார், தம் 'முதற்குறள் வாத நிராகரணத்'தை அதற்குச் சிறிது முன்புதான் 'தம் இருபது' வயதுக்குள் எழுதியிருக்க வேண்டும்.

அடிகளார் இயல்புநலத்தைப் பலவகையிலும் அது வெளிப்படுத்துகிறது. 'தமிழ்மொழி சமக்கிருதத்தைப் பிறப்பிடமாகக் கொள்ளாத தனிச்சொல்' என்பது அடிகளின் கருத்து. எப்படி என்பதற்குக் காரணங்கள் விளக்கும் முறையில் அவர்க்குரிய இயல்பு நலம் நன்குகத் தெரிகிறது.

"வடமொழியேயன்றிப் பிறபாடைச் சொற்களும் வந்து விரவித் தமிழ் நடைபெறுதலின் அவையுந் தமிழ்க்குப் பிறப்பிடமாம் போலுமெனக் கடாவுவார்க்கு இறுக்கலாகாமையின் அவர் கூற்றுப் பொருந்தாதென மறுக்க'' என்றிங்ஙனம் ஒரு காரணம் கொண்டு அடிகளார் மறுத்தலின், காரண இயல்பு நன்கு விளங்குதல் காண்க. இன்னும் பல காரண விளக்கங்கள் இதற்குக் காட்டப்பட்டிருக்கின்றன.

திருவள்ளுவர் 'எழுதிய' திருக்குறள் என்பதைவிடத் திருவள்ளுவர் 'அருளிய' திருக்குறள் என்பது சிறப்பு என

அடிகள் கருதுகிருர். அதற்குக் காரணம், 'அருளால் எழுதினுர்' என்பது. அருள் காரணமாகத் திருவள்ளுவர் எழுதிய இயல்பு நலத்தை அடிகள் விளக்குதலும் அதனை ஒரு முதன்மையாகக் கொள்ளுதலும் கண்டுகொள்க.

மேலும், ஒரு கருத்து விளக்கம் :

"ஒரு நாட்டில் பலவகைப் பொருளும் நிரம்பி வளந் துவன்றி இருந்துழி அந்நாட்டிற் பொருளைக் கவர்தற் பொருட்டுப் பல பாடை வழங்கும் பல தேய மக்களும் ஆண்டுப் போந்து தாம் வேண்டும் காலம் உறைவரன்றே! அவ் வளவிய நாட்டு மக்கள் ஆங்ஙனம் போந்த பலவேறு பாடை பேசும் மக்களோடு பண்டம் மாற்றும் காலம் அவர்கள் கூறும் சொற்களைத் தாமும் கற்றுத் தம்முன் பல்வகைப் பொருளும் மேதகத் துவன்றி வளங்கெழுமிய தொன்ருயிருந்த தென்பதூஉம், இருக்கிறதென்பதூஉம், யார்க்கும் உடன்பாடாம். ஆதலால், இதில் பல நாட்டாரும் போந்தார். போதரவே, அவர்கள் வழங்கும் சொற்களையும் நந்தமிழர் தாமும் வழங்குவாராயினர். பிற பாடை வழங்கும் தேயங்கள் நந் தென்னுடுபோற் பல வள முடையவாகிச் சிறக்காமையான் அந் நாட்டுச் சொற்களில் அருகிருந்த நாட்டுச் சொற்களன்றிப் பிற பாடைச் சொற்கள் விரவாவாயின."

"தமிழ் மொழிப் புணர்ச்சிக்கட்படுஞ் செய்கைகளும், குறியீடுகளும், வினைக்குறிப்பு வினைத்தொகை முதலிய சில சொல்லிலக்கணங்களும், உயர்திணை, அஃறிணை முதலிய சொற்பாகுபாடுகளும், அகம் புறம் என்னும் பொருட்பாகுபாடுகளும், 'குறிஞ்சி' 'வெட்சி' முதலிய திணைப் பாகுபாடுகளும், அவற்றின் பகுதிகளும், வெண்பா முதலிய செய்யுளிலக்கணமும், இன்னேரன்ன பிறவும் வட மொழியிற் பெறப்படா" என்பது தமிழியல் விளக்கம்.

"மக்களுக்கும் பிறவுயிர்க்கும் உலகில் நிகழுந் தொழில் களெல்லாம் உறங்குதல் விழித்தல் எனும் இரண்டு தொழி லுளடங்குவனவாம். இவற்றுள் உறக்கம் என்பது அவ் வுயிர்களின் அறிவு நிகழாதடங்கிக் கிடக்கு நிலையாம்; விழிப்பு என்பது அவற்றிற்கு அவ்வறிவு விரிந்து நிகழ்ச்சி யுடைய நிலையாம். பிறவுயிர்களை யொழித் தொழிந்த மக்கள் அத்தகைய விழிப்பு நிலையில் புரியுந் தொழில்க ளெல்லாம் மனத்தாற் குறிக்கப்படுவனவும் மொழியா லிசைக்கப்படுவனவும் மெய்யா லியக்கப்படுவனவுமாகிய

வினைகளுள் அடங்கும்; இங்ஙனம் மக்கள் மன மொழி மெய் யென்னும் மூன்றிலன்றிப் பிற கருவிகளான் ஒரு வினையும் புரிவதாகக் காணப்படாமையான் எத்தகைய பாடையேனும் அஃது அம் மக்களின் முக்கருவிகளையும் செவ்விய நெறிக்கட் கடாவி அவரறிவைப் பெருக்கி வீட்டு நெறி கூட்டுதற் பயத்ததாகல் வேண்டும். ஆகவே, நஞ் செந்தமிழ் மொழியெனும் நங்கை மக்கள் தம் மனத்தாற் பிறிதொன்றைக் குறித்துத் தம்முயிர்க் குறுமுறுதியை இழவாமை அதனல் இயற்றமிழைப் பயிலவும், மொழியாற் பிறிதிசையாமை இசைத்தமிழைப் பயிலவும், மெய்யாற் ரேன்றியவா றியங்காமை நாடகத்தமிழை நாடவும், முத் திறப்பட்டு அப் பாகுபாடுடைமைச் சிறப்புத் தோன்ற முத் தமிழென்னும் அரிய பெயரால் வழங்கப்படுவாளாயினள். பிற பாடைக்கண்ணும் வியாகரண சங்கீத நாடகாதிக ளிருப்பினும்... தமிழிற்போலத் 'திரிசமஸ்கிருதம்' முதலிய குறியீடு பிற பாடைக்கண் காணப் படாமையின் அவை யெல்லாம் பாகுபாட்டுச் சிறப்பிலவெனக் கொள்க'' என்பது மற்ருெரு சிறப்புத் தமிழியல்!

''தொழிலை ஏனை யெழுத்துக்களுக்கு நிமித்த காரண மெனவும் அகரத்தை முதற்காரணமெனவும் கொண்டார் ஒருவருமிலர்; அன்றிக் கோடு மென்பார்க்கு ஏதுவின்மை யின் பொருந்தாவென மறுக்க. காரணங் காரியப்படுந் துணையுந் துணைக்காரணம் அதனோ டொன்றித்து நிற்றல் கண்கூடா யறியப்படுதல்போல் நாதமாகிய முதற் காரணம் இ, உ முதலிய வெழுத்துக்களாகக் காரியப்படு வுழி ஆண்டவற்றோ டொற்றித்து நிகழும் இதழ், நா, பல், அணம் முதலியவற்றின் ருெழிலே துணைக்காரணமா மென் பதூஉம், முதற் காரணத்தின்கட் டுணைக்காரணத்தை யுய்த்தன் மாத்திரைக்கே நிமித்த காரணம் வேண்டப் படுதல்போல், நாதம் ஏனையெழுத்துக்களாகக் காரியப்படு தன் மாத்திரைக்கே அங்காப்பு வாயிலாக அவ்வங்காப்பே அகரமாதலின் அது நிமித்த காரணமா மென்பதூஉம் சாலப் பொருத்தமுடைய தெனவும் இங்ஙன மேதுக் கூற லின்றி வாளா மனம் போனவாறு கூறுவார் கூற்று வெறிய வெனவு முணர்ந்து கொள்க'' என்பதும் கவனித் தற்குரியது.

இளமைக் காலம் அடிகளார்க்கு ஒரு செழுமையான பருவ மாகும்; புலமையும், ஆராய்ச்சியும், இயற்கை யுணர்ச்சியும் அடிகளார் தமிழ் நடையைக் கூடச் செழிப்பித்தன. இளமைப்

பருவத்தில் எழுதப்பட்ட சமக்கிருதம் முதலிய அயல் மொழிச் சொல்லெல்லாம் தூயவாய்த் தமிழாக்கப்பட்டுவிட்டன. இல்லம் முதல் விரிவுரை அவைக்களம் வரையில் பேச்செல்லாம் தமிழே. கட்டுரைகள் முதல் நூலெழுத்து வரையில் எழுத்தெல்லாம் தமிழே. தமிழ் உருவமாய் அடிகள் விளங்கினர்கள். தொடர்களெல்லாம் இயல்பு நலம் பெற்றன.

ஒரு கருத்தை விளக்கும்போது அதற்காக விளக்கப்படும் சொற்கள் தொடர்கள், காரியம் நிகழும் முறையே கூடிவந்து இயல்பு விளக்கமாய் இயன்றன கருத்துக்கு ஏற்ற சொற்கள் தமிழில் நிரம்ப உண்டு. புதிய சொல்லாயினும், பழைய சொல்லாயினும் கருத்து விளக்கமுள்ள சொற்கள் மிகக் கவர்ச்சியாகவும் காணப்படும். அவையெல்லாம் மனிதவசியம், யோக நித்திரை, தொலைவில் உணர்தல், மக்கள் நூறாண்டு உயிர் வாழ்தல், இறப்பின் பின் இருப்பு முதலிய அடிகளின் கலை நூல்கள் பலவற்றிலும் அங்கங்கே காணலாம்.

சைவசித்தாந்தக் கழகம் அடிகளார் நூல்களை அருமையாய்ப் பதிப்பித்து வருகின்றது. அவற்றுள், 'அறிவுரைக் கோவை' என்பது ஒன்று. அதில 'தமிழின் ஒலி எழுத்துக்கள்' என்பது ஒரு தலைப்பு.

தமிழின் ஒலி எழுத்துக்களில் அ, ஆ முதலிய பன்னிருயிர் எழுத்துக்களும் க, ங முதலிய பதினெண் மெய்யெழுத்துக்களும் முறையே எப்படித் தோன்றின என்னும் இயற்கை அழகை அடிகளார் மிகச் சிறப்பாக எடுத்து விளக்குகிறார்கள். அந்த இயல்பு நலனை எப்படி வியப்பது? அன்பர்கள் தாம் அதனை ஊன்றிப் படித்து உணர்தற்குரியர்.

இயற்கையாக எழுகின்ற ஒலிக் குறிப்புகளே தமிழ் மொழியை அணி செய்கின்றன. இதனைப் படிப்போர், தமிழ் ஓர் இயற்கை மொழி என்பதைக் கட்டாயம் ஒப்புக்கொள்வர்.

தமிழ்மொழியில் இத்தகைய ஒலி ஆராய்ச்சிப் பகுதிகளை அறிஞர்கள் இதுகாறும் செய்யவில்லை. பிறர் செய்யாத நற்றொண்டுகளையெல்லாம் சைவத்துக்கும் தமிழுக்கும், அடிகள், அடிப்படையிட்டு விளக்கம் செய்திருக்கிறார்கள்.

அறிவுரைக் கோவையில் வருகின்ற 'தமிழின் ஒலி எழுத்துக்கள்' என்னும் பகுதியில், நில இயற்கைக்கு ஏற்றபடி அவ்வந் நிலங்களில் உறையும் பொருள்கள், சிற்றுயிர்கள், மக்கள் முதலியவற்றின் இயற்கைகளும் பலவேறு வகையவாய்க் காணப்படுதலால், அவ்வந் நிலத்து மக்களின் குரல் ஒலிகளும் பல திறப்பட்டுத் தோன்றுவவாயின என்பதும் காண்க.

அறிவு முறுகித் திறமுடையன எழுதி அதற்குமேல் இலக் கண விதிகள் ஆன்றோர் மேற்கோள்கள் காட்டும் இயற்கை நெறியிற் செல்லாமல் ஓர் இயைபுமில்லாமல் வாளா இலக்கண இலக்கியம் முதலியவற்றைக் கைக்கொண்ட மட்டும் எழுதி விடுதல், 'இயல்பு முறை'யாகாது என்பது அடிகள் கருத்து.

சாகுந்தல நாடக ஆராய்ச்சியின் முதற் பதிப்பு 1907-ல் வெளிவந்தது. அதற்கு முன் ஆண்டுகளில் அஃது எழுதப்பட்டது. 'இந்நாடக அமைப்பிற் சில குறைபாடுகள்' என்று ஒரு பகுதி, நூலின் கடைசியில் உள்ளது. அப் பகுதியில அடிகளார் குறிப்பிடும் செய்திகள் சில வரு மாறு:

"இயற்கைக்கு முழுமாறான நிகழ்ச்சிகளை ஆசிரியன் இந் நாடகக் கதை நிகழ்ச்சியின் இடையிடையே புகுத்தி யிருப்பது இதனைப் பயில்வார்க்கு உண்டாம் இன்ப உணர் வினைச் சிதைப்பதா யிருக்கின்றது. சகுந்தலை துஷ்யந்த மன்னனை யாழோர் முறையில் மணந்து கருக் கொண் டிருக்கும் செய்தியினை வானின்கட் டோன்றிய ஒரு தெய்வ ஒலி, அவள் தந்தை காசியபருக்கு அறிவித்த தென்னும் புனைந்துரை, பயில்வார்க்கு மகிழ்ச்சி தருவதாயில்லை. அவடன் தோழிமார் வாயிலாகவே அச் செய்தி அவரது செவிக்கு எட்டியிருக்க வேண்டும். இச் சிறு நிகழ்ச்சிக்கு ஒரு தெய்வ ஒலியினைக் கொணர்ந்து மாட்டியது நாகரிக அறிவின்பாற் பட்டதாயில்லை.

"இந்திரற்கு அரக்கரால் நேர்ந்த இடரை மண் ணுலகத் துளனான ஒரு மன்னன் நீக்கினன் என்றால் சிறி தும் நம்பத் தகுந்ததாயில்லை. இயற்கைக்கு மாறான இந் நிகழ்ச்சியை இங்ஙனம் படைத்து மொழியாமல் இயற்கை யோடு ஒத்த ஒரு நிகழ்ச்சியால செய்திருந்தன ராயின்....இந் நாடகம் சுவை பெரிதும் மிகுந்து பயில் வார்க்குக் கழிபேருவகையினை அளியா நிற்கும்.

"இயற்கைச் செந்நெறி பிழைத்து இங்ஙனமெல்லாம் ஏலாதவற்றை இயைத்து இடையிடையே இழுக்கினர்.

"உலக வியற்கை மக்கள் இயற்கையோடு மாறு கொள்ளாவாறு நாடக நூல் யாக்கும் வகைகளை விரித்து விளக்கிய தொல்காப்பியம், இறையனார் அகப்பொருள் முதலிய பண்டைத் தமிழ் நூல்களின் ஆசிரியர்க்கும் அவர் வழிப் பிழையாது போந்து கலித்தொகை, அகநானூறு,

திருச்சிற்றம்பலக் கோவையார் முதலான நாடகத் தமிழ் நூல் யாத்த நல்லிசைப் புலவர்க்கும், காளிதாசரைப் போல் உலக வியற்கை மக்கள் இயற்கையோடு திறம்பிக் கூறுவாருரைகள் ஒரு சிறிதும் உடம்பாடாகா.

"கொன்னே உலகியலோடு மாறுகொண்டு காளி தாசர் அதனைப் புணர்த்தியது ஒரு குறைபாடே.

"பட்டது பட்டாங்கு கிளக்கும் தமிழ்ச் சான்றோர் மலிந்த இத் தென்றமிழ் நாட்டிலிருந்து அவரது புலனெறி வழக்கிற் பயின்றிருந்தனராயின் காளிதாசர் யாண்டும் எஞ்ஞான்றும் நடவாத புனைந்துரையும் பிறவும் இந் நாடக நூலின்கட் படைத்துப் புகுத்தியிரார்.

"இயற்கையில் நடவாப் பொய் நிகழ்ச்சிகளைத் தாம் வேண்டியவாறெல்லாம் படைத்து அவர் இழுக்குவா ராயினர்."

சிவஞானபோத ஆராய்ச்சி மிக இளமையிலேயே (1904-இல்) அறிவுக்கடல் என்னும் 'ஞானசாகரம்' இரண்டாம் பதுமம் நான்காம் இதழில் தொடக்கப்பட்டது. அதில், 'முப்பொருள்களின் இயல்பான விளக்கங்கள், இறைவனுடைய எண்குணங்கள்' உட்பட முதலில் வருகின்றன. கடவுளுடைய எண்குணங்களை அடிகள் மிகவும் இயல்பாக விளக்குகின்றார்.

'இயல்பாகப் பாசங்களில் நீங்குதல்' என்னும் பகுதியில் 'ஒவ்வொரு பொருட்கும் உள்ள இயற்கைத் தன்மையை மாற்றுதல் யாரானும் ஆகாது என்பதும், பளிங்கில் ஒருருவம் தோன்றுதலும் முருட்டுக் கருங்கல்லில் அது தோன்றாமையும் என்னவென்று நுணுகி ஆராய்வார்க்குப் பொருளியற்கை இனைத்தென்றல் நன்கு அறியப்படும்' என்பதும்,

'பேரருள் உடைமை' என்னும் பகுதியில் 'சீவர்கட்குப் போலச் செயற்கையான் விளைவதன்றி இறைவன் மாட்டு இயற்கையில் பொருந்திக் கிடக்கும் ஓர் அருமைக் குணம்' என்பதும்,

'முடிவில் ஆற்றலுடைமை' என்னும் பகுதியில், 'ஆற்றல் எனினும் 'சக்தி' எனினும் ஒக்கும்; இஃது ஒரு பொருட்கண் இயற்கையாய்ப் பிரிவின்றி நிலைபெறுவது' என்பதும், அடிகளின் இயல்பு நலத்தை விளக்கக் கூடியன.

இடையில், 'மண் முதல் நாதம் வரையில் முப்பத்தாறு கருவிகளும் மனித்தப் பிறவியில் வேலை செய்வதை' இயல்பான ஆராய்ச்சியால் விளக்கிச் செல்கின்றார். ஒவ்வொரு கருவியும் தேவைதானா? கருவிகள் எப்படி இயங்குகின்றன? அவை

எவ்வாறு பயன்படுகின்றன என்பனவெல்லாம் ஏதுக்கள், எடுத்துக்காட்டுகள், இயற்கைப் பழக்கங்கள் என்பவற்ருல் விளக்கிச் செல்கிருர்.

அதன்பின், நூற்பா விளக்கங்கள் வருகின்றன. ஒவ்வொரு நூற்பாவிலும் கருத்து விளக்கங்களாக எழுதியிருக்கும் பகுதிகள் முற்றிலும் இயற்கை விளக்கத்தோடு கூடியன.

இவற்றில் ஒரு பகுதி மனத்தைப்பற்றி வருகிறது; (பக்கம் 41-8) பதம் பார்த்தல் என்பதுபோல இவ்வொரு பகுதியின் இயல்பான ஆராய்ச்சியுரையைக் கவனித்தாலும் போதும்; நூல் முழுதும் எத்தகைய இயல்பு நலத்தில் இயன்றிருக்கிறதென்பதை அறிந்துகொள்ளலாம்.

மிக அருமை வாய்ந்த இவ்வாராய்ச்சி நூல் முற்றுப் பெருமல் இடையிலேயே நின்றுவிட்டமை மக்கள் தவக்குறைவே. இங்ஙனமே, முதற் குறள் வாத நிராகரணத்தில் "ஷேக்ஸ்பியர் காளிதாசர் முதலிய வித்துவான்கள் இயற்றிய நாடகக் காப்பியங்கள் போல்வன தமிழில் இல்லையெனக் கூறுவார் தெளியுமாறு 'நித்தில மணி' என்னும் நாடகக் காப்பியத்தை விரைவில் வெளிப்படுத்துவாம்'' என்று அடிகள் கூறியதும் நின்றுவிட்டதே!

'கோகிலாம்பாள் கடிதங்கள்' என்பதில் இயற்கைக்கு மாருன நிகழ்ச்சி எதுவுமின்றி எல்லாம் இயல்பு நலத்தோடு, பள்ளம் வீழ் நறும் புனல் ஒப்ப, முடிவறியும் வேட்கையோடு விரைந்து செல்லுகின்றது. ஊர்ப் பெயர்கள், அவ்வூர்களின் இயல்புகள், கதைத் தொடர்ச்சியில் சிக்கல்கள், அவை தீரும் முறைகள், இடையிடையே தம் கொள்கைகளின் இயல்பான அமைப்புகள், கதைக்கு உரியோர் சொல்லும் மொழி நடைகள், புனைந்துரைகள் எல்லாம் இயற்கைப் போக்குப்படியே அமைந்திருக்கின்றன. கடைசியில் வியப்புணர்வில் முடியுமாறு கதை நூல்கள் சென்றிருக்கிற அழகு மிகவும் பாராட்டற்குரியது. நூலின் கடைசியில் 'குகையின் இயற்கை' விளக்கப்படுதல் இவ்வுண்மையை எடுத்துக்காட்டப் போதும்.

முப்புச் சிறப்பு (பின் 50 ஆண்டுகள்):

இளமைக்குப் பின் இருபத்தைந்து ஆண்டுகள் அடிகளார் உயிர்வாழ்ந்திருக்கிருர்கள். (1925 முதல் 1950 வரையில்) இக்காலத்தில் அடிகளார் தம் மாணவர்களுக்குப் பாடம் சொல்லுதலில் ஊக்கங் கொண்டிருக்கிருர்கள்.

அவற்றில் முக்கியமான பாடம், சிவஞானபோதமாய்ச் செறிவு கொண்டிருந்தது. இளமையில் தொடங்கிய 'சிவஞான போத ஆராய்ச்சி' இக்காலத்தில் மிகவும் பயன்பட்டது. 'திருக் குறள் ஆராய்ச்சி'யும் முடிவு பெருமலே நின்றுவிட்டது. திருக் குறள் உலகப் பொதுமறையும் சிவஞானபோதம் தமிழகத்தின் சிவநெறியுமாக இருத்தலின் சிவஞானபோத பாடத்தில் திருக்குறள் அடிக்கடி வரும்.

'திருச்சிற்றம்பலக் கோவையார்' பாடம் எனக்கு மட்டும் இக்காலத்தில் எழுந்ததேனும், அதைப்பற்றிய நினைவு, அடிகளார் உள்ளம் முழுதும் எப்போதும் ஆட்கொண் டிருந்தது.

தஞ்சை, திருச்சி முதலிய இடங்களில் நடைபெற்ற சொற் பொழிவுகள் பெரும்பாலும் நூல்களாக வெளிவந்தன. 'கடவு ளுக்கு மாறுன கொள்கைகள் சைவம் ஆகா' என்பதிலும், 'பழந் தமிழ்க் கொள்கையே சைவசமயம்' என்பதிலும் அடிகளின் இயல்பு நலம் நன்கு வெளிப்படுவதோடு தமிழ்நெறி சிவ நெறியே என்பதும் இனிது புலப்படுகின்றது.

'திருவொற்றி முருகர் மும்மணிக் கோவையுரை' வரி வரி யாக ஆராய்ந்து இக்காலத்தில் பதிப்பிக்கப்பட்டது. 'மாணிக்க வாசகர் வரலாறும் காலமும்' என்னும் பெருநூலின் இயல்பான ஆராய்ச்சி அடிகள் உள்ளத்தை மிகவும் கவர்ந்து, மேலெழுந்து ஓங்கிச் சிறந்து, முடிவுபெற்றது. தமிழ் நூல், வடநூல் பற்றிய கருத்துக்கள், கால ஆராய்ச்சிகள், தமிழ கத்தின் அரசு ஆராய்ச்சிகள் பெரும்பாலும் இந்நூலில் இயல்பு நலங்கொண்டே இயற்கை யுணர்ச்சியோடு எண்ணி வெளிப் படுத்தப்பட்டிருக்கின்றன. அடிகளின் கனிந்த தமிழ், பழுநிய நடை, ஆழ்ந்தகன்று உயர்ந்து நுணுகிய ஆராய்ச்சி இயல்பு, பன்னூல் மேற்கோள்கள் பலவும் இதிற் காணலாம்.

அடிகளிடம் நான் தொடர்பு கொண்டதிலிருந்து கடைசி வரையில் வாழ்க்கையிலும், நூல்முறையிலும், விரிவுரைகளிலும் இங்ஙனமெல்லாம் பலகாலும் இயல்பு நலம் கண்டுவந்திருக் கிறேன். எல்லா முடிவுகளுக்கும், ஆராய்ச்சிகளுக்கும் அடி களின் இயல்பான போக்குதான் காரணமாயிருந்து அவற்றை விளைத்துக் கொடுத்திருக்கிறது.

———

# சங்கநூல்களில் மீன்கள்

[பி. எல். சாமி, பி.எஸ்ஸி.]

(முன் இதழ் ௧௨௨ஆம் பக்கத் தொடர்ச்சி)

## 6. கெடிறு:

சங்க நூல்களில் கெடிறு என்றொரு மீனைப்பற்றி மூன்று பாடல்களில் கூறப்பட்டுள்ளது.

"முள்ளெயிற்றுப் பாண்மக ளின்கெடிறு சொரிந்த
அகன்பெரு வட்டி நிறைய மனையோள்" — ஐங்குறுநூறு, 47

"பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை
இருங்கழி யினக்கெடி றாருந் துறைவன்"—ஐங்குறுநூறு. 167

---

*ஆரல் மீனை இக்காலத்தில் ஆராமீன் என்றழைக்கின்றனர். ஆரல் மீன் நன்னீர் மீன் வகையாகும். ஆரல் மீன் ஆறுகளிலும் உப்பங்கழிகளிலும் காணப்படும். இந்த மீன் மண்ணிலும் சேற்றிலும் புதைந்துகொள்ளும் தன்மையுடையது. சேற்றில் ஒளிப்பதையும் நீர் கழிந்த சேற்றில் இருப்பதையும் சங்கப்பாடல்கள் கூறியுள்ளன. இதற்கு மூக்கு நீளமாகவும் கூர்மையாகவும் உள்ளது. அம்பின் முனை போன்று கூர்மையாக உள்ளதால், நீண்டு உள்ளதால் கதிர்மூக்கு ஆரல் என்று புறநானூறும் அகநானூறும் அழைத்துள்ளன. நாரையும் குருகும் கொக்கும் ஆரலை விரும்பி உண்பதாகச் சங்க நூல்கள் கூறியுள்ளன. கொக்கின் பிள்ளை கடுகு போன்ற ஆரலின் முட்டையை உண்டதாகப் புறநானூறு கூறியிருப்பது அரிய இயற்கைச் செய்தியாகும். மனிதர் ஆரல் மீனைச் சுட்டு விரும்பி உண்டதாகப் புறநானூறு கூறியுள்ளது. ஆரல் கருவாடு சுவை உடையதாகக் கருதப்படுகின்றது. ஆரல் தடியை நெருப்பில் சுட்டுத் தின்றதையும் புறநானூறு கூறியுள்ளது. ஆரல் மீன் சுவையான மீனாகும். ஆர்வதற்குச் சுவையுடைய மீன் ஆதலால் ஆரல் என்ற பெயர் வந்திருக்கலாம். ஆரல் மீனை ஆங்கிலத்தில் Sandeel என்றும் அறிவியலில் Rhynchobdella aculeata என்றுமழைப்பர்.

---

*முன்பு விடுபட்ட இப்பகுதி முன்பரல் ௨பக்கம் ௮௮இன் அடியிலே சேர்ப்பிக்க வேண்டியதாகும்.

"நுண்ணூரற் பருவரால்
குரூஉக்கெடிற்ற குண்டகழி" —புறம், 18

"சினைக்கெடிற் றன்ன செங்கேழ்ச் செறிவிரல்"
—பெருங்கதை, 4 : 10, 101

கெடிறு என்பதற்குக் கெளிறு என்று பொருள் கூறப்பட்டுள்ளது. கெளிறு என்ற மீன் தற்காலத்தில் கெளுத்தி என்ற பெயரில் வழங்குகின்றது. இந்த மீன் தெரிந்த மீனாகும். ஒரு நற்றிணைப் பாடலில் கெளிறு என்ற பெயர் காணப்படுகின்றது.

"சிறங்கிளர் தூவிச் சிறுவெள்ளாங் குருகே
எம்மூர் வந்தெம் ஒண்டுறைத் துழைஇச்
சினைக்கெளிற் ருர்கையை அவரூர்ப் பெயர்தி" —நற்றிணை, 70

இப்பாடலில் கெளிறு என்ற சொற்குப் பாடமாற்றமாகக் கெடிறு என்ற சொல் காட்டப்பட்டுள்ளது. சங்க நூல்களில் கெடிறு என்ற பெயரே பாடல்களில் பயின்று வருவதால் கெளிறு என்ற பெயர் நற்றிணையில் வந்திருக்க முடியாது. ஆதலின் கெடிறு என்ற பாடமே சரியானதாகும். ஔவை துரைசாமி பிள்ளை அவர்கள் வெளியிட்ட நற்றிணைப் பதிப்பில் கெடிறு என்ற பெயரே காணப்படுகின்றது. கெளிறு என்ற பெயரைப் பாட மாற்றமாகவும் காட்டவில்லை. ஆனல், அவர் வெள்ளாங்குருகை உள்ளான் என்று கூறி, வாலாட்டி என்ற Wag tail என்று ஆங்கிலத்தில் கூறியது முற்றிலும் தவருகும். வெள்ளாங்குருகு வெண்மை நிறமான கொக்காகும். உள்ளான் வெண்மை நிறமே இல்லாதது. உள்ளானும் வாலாட்டியும் முற்றிலும் வெவ்வேறு வகையான பறவையினங்களாகும். தேவாரத்தில் முடங்கிருல், முதுநீர் மலங்கு, இளவாளை, செங்கயல், வரால், களிறு ஆகிய மீன்கள் தண்கழனியை அடைந்ததாக அப்பர் கூறியுள்ளார். இவை எல்லாம் நன்னீர் மீன்கள். இந்த மீன்களில் கடைசியாகக் களிறு என்ற மீன் பெயர் சொல்லப்பட்டுள்ளது. களிறு என்ற பெயர் கெளிறு என்ற மீனைக் குறிப்பதாகத் தெரிகின்றது. கெளிறு என்றிருக்க வேண்டுமென்று கருத இடமுண்டு. கெடிறு என்ற சங்ககாலப் பெயர் கெளிறு என மாறிற்று என்பதற்குச் சான்று உள்ளது. சங்கநூல்களில் களிறு என்று கூறப்படும் யானையின் பெயர் "கடிற்றுப் பாகன்" (பெருங்கதை 1 : 40 : 32) என்று வரும் வரியில் கடிறு என்று வழங்கியுள்ளது. ஆகலின் கெடிறு என்பதே கெளிறு என ஆகியிருப்பது தெளிவாகின்றது களிறு என்ற பெயர் யானைக்கும் காட்டுப்பன்றிக்கும் பெயராக வழங்கியுள்ளதுபோல்

அதே பெயர் கெடிறு என்ற மீனுக்கும் தேவார காலத்தில் வழங்கியுமிருக்கலாம்.

கெளுத்தி மீன் செதிலற்ற தோலையுடையது. இது நன்னீர் மீனுயினும் நீருக்கடியில் அழுக்குகளைத் தின்று வாழு மாதலால் சிலர் இந்த மீனை விரும்பி உண்பதில்லை. ஆயினும் இந்த மீன் சுவையுடைய மீனாகும். ஐங்குறுநூற்றில் கழியில் காணப்பட்டதாகக் கூறும் கெடிற்று மீன் சேர நாட்டுக் கடற் கரையோரமாகக் கழிகளில் காணப்படும் Macrones Malabaricus என்ற மீனாகும். இதைக் கடற்காக்கை உண்டதாக ஐங்குறு நூறு கூறுகின்றது. தமிழ்நாட்டில் காணப்படும் கெளுத்திமீனை Macrones Vittatus, Macrones Kaletius என்ற இருவகை களாகக் கருதலாம். 'குரூஉக் கெளிறு' என்றதால் பொன்னிற மான கெளுத்தியைக் குறித்திருக்கலாம் இதைத் தமிழ்நாட்டில் தற்காலம் கெளுத்தி என்றழைக்கின்றனர். ஐங்குறுநூற்றுப் பாடலில் வரும் உள்ளுறை உவமத்தில் கெடிறு முள்ளுள்ள மீனாதலின், அதனை உண்டல் பரத்தையரை நுகர்தற்கு ஒப்பிட்டுக் கூறியிருப்பதைக் காணலாம். கெளுத்தி மீனைச் சங்ககாலத்தில் சிறப்பற்ற மீனாகக் கருதினர் என்று தெரி கின்றது.

## 7. கோழுமீன் :

சங்கநூல்களில் கொழுமீன் என்ற சொல் சில பாடல்களில் அடைமொழியாகவும் சில பாடல்களில் ஒரு மீனின் சிறப்புப் பெயராகவும் வழங்கிவந்துள்ளது; அடைமொழியாக வழங்கின இடங்களில கொழுவிய மீன் என்ற பொருளில் வழங்கியுள்ளது. கொழுப்பை உடைய மீன்களுக்கு இந்த அடைமொழி வழங்கி யுள்ளது. இந்த மீன்களை வெட்டித் துண்டு போட்டுக் கருவாடு செய்வதையும் சுட்டுத் தின்பதையும் பாடல்கள் கூறியுள்ளன. கொழுப்புடைய மீன். கோழி முதலியவற்றைக் 'கொழுமிதியாக' இருப்பதாகக் கூறும் வழக்கும் தஞ்சை மாவட்டத்துப் பேச்சு வழக்கில் வருகின்றது.

"கொழுமீன் ஆர்கைச் செழுநகர் நிறைந்த
கல்லாக் கதவர் தன்னையர் ஆகவும்" —நற்றிணை, 127

"வளிசுத்து வரித்த புன்னை முன்றில்
கொழுமீன் ஆர்கைச் செழுநகர்ச் செலீஇய" —நற்றிணை. 159

"அருளா யாகலோ கொடிதே இருங்கழிக்
குருகேறீர்ப் கொழுமீன் மாந்தித்" —நற்றிணை, 198

"முண்டகம் வேய்ந்த குறியிறைக் குரம்பைக்
கொழுமீன் கொள்பவர் பாக்கங் கல்லென" —நற்றிணை, 207

"கொழுமீன் சுடுபுகை மறுகினுள் மயங்கிச்
சிறுவி ஞாழல் துறையுமார் இனிதே" —நற்றிணை, 311

"பரந்தோங்கு வரைப்பின் வன்கைத் திமிலர்
கொழுமீன் குறைஇய துடிக்கட் டுணியல்"
—மதுரைக் காஞ்சி, 319-320

"கொழுமீன் குறைய வொதுங்கி வள்ளிதழ்க்
கழுநீர் மேய்ந்த கயவா யெருமை"
—சிறுபாணாற்றுப்படை 41-42

"கொழுமீன் விளைந்த கள்ளின்
விழுநீர் வேலி நாடுகிழ வோனே" —புறம், 13

"உப்புநொடை நெல்லின் மூரல் வெண்சோறு
அயிலை துழந்த அம்புளிச் சொரிந்து
கொழுமீன் தடியொடு குறுமகள் கொடுக்கும்" —அகம், 60

"தடந்தா ணாரை யிரிய வயிரைக்
கொழுமீ னார்கைய மரந்தொறுங் குழாஅலின்
வெண்கை மகளிர் வெண்குரு கோப்பும்"
—பதிற்றுப்பத்து 29-4-6

'கொழுமீன் ஆர்கைச் செழுநகர்' என்று இரண்டு நற்றிணைப் பாடல்கள் கூறியதிலிருந்து பெருத்த கொழுவிய மீனை, உண்ணுதல் செழுமை மிக்க கடற்கரை ஊரின் சிறப்பாகக் கருதப்பட்டது என்று தெரிகின்றது. கொழுமீனைத் - துடியின் கண்போன்று இருக்கும் கொழுமீனின் துண்டை உண்பது வழக்கமாக இருந்தது. கொழுமீனைத் திமிலில் பிடித்து வலிய கையையுடைய பரதவர் கொண்டுவருவர் என்று கூறப் பட்டுள்ளது. கொழுவிய மீனின் கருவாட்டை நெல்லால் ஆன சோற்றில் அயிலை மீனைப்போட்டு ஆக்கிய புளிச்சாறு போட்டுக் குறுமகள் கொடுப்பாள் என்று அகநானூறு (60) கூறுகின்றது. தடியப்பட்டு உணக்கப்பட்ட கருவாடு தடியென்று கூறப் பட்டது.

கொழுமீன் என்ற பெயர் அகநானூற்றிலும் நற்றிணை யிலும் சில பாடல்களில் தனிப்பட்ட ஒரு மீன்வகையைக் குறித்து வழங்கியுள்ளது. அகநானூற்றுப் பழைய உரை யாசிரியர் கொழுமீன் என்ற பெயருக்கு ஒரு மீன் விசேடம் என்று இரண்டு இடங்களில் பொருள் கூறியுள்ளார். "கொழு மீனுண்ட அன்னங்களே" என்று வரும் திருச்சிற்றம்பலக்

கோவை (188) வரிக்குப் பேராசிரியர் எழுதிய உரையில் கொழு மீனென்றது ஒரு சாதி என்று கூறியுள்ளார். ஆதலின் கொழு மீன் என்பது ஒருவகை மீன் என்பது தெளிவாகின்றது.

"நெடுங்கடல் அலைத்த கொடுந்திமில் பரதவர்
கொழுமீன் கொள்கை அழிமணல் குவைஇ
மீன்நெய் அட்டிக் கிளிஞ்சில் பொத்திய" —நற்றிணை, 175

"பெருநீ ரழுவத் தெந்தை தந்த
கொழுமீ னுணங்கற் படுபுள் ளோப்பி" —அகம், 20

"பெருந்திரை முழக்கமொ டியக்கவிந் திருந்த
கொண்ட லிரவி விருங்கடன் மடுத்த
கொழுமீன் கொள்பவ ரிருணீங் கொண்சுடர்" —அகம், 100

"குருகீ நீர்நாய் கொழுமீன் மாந்தித்
தில்லையம் பொதும்பிற் பள்ளி கொள்ளும்" —நற்றிணை, 195

"இவைநுமக் குரிய வல்ல விழிந்த
கொழுமீன் வல்சி யென்றன மிழுமென" —அகம், 110

"குடுமிக் கொக்கின் பைங்காற் பேடை
யிருஞ்சேற் றள்ள லாட்புலம் போகிய
கொழுமீன் வல்சிப் புன்றலைச் சிறாஅர்" —அகம், 290

மேற்காட்டப்பட்ட பாடல்களில் கொழுமீன் என்ற சொல் ஒரு மீன் விசேடத்தை, ஒருவகை மீனைக்குறித்தே வழங்கியதாகத் தெரிகின்றது. இந்த மீன் எதுவென்று உறுதியாக அறிதற்கு நற்றிணை 291 ஆம் பாடல் துணைபுரிகின்றது.

"நீர்பெயர்ந் தாறிய செறிசேற்று அள்ளல்
நெய்த்தலைக் கொழுமீன் அருந்த இனக்குருகு
குப்பை வெண்மணல் ஏறி அரைசர்
ஒண்படைத் தொகுதியின் இலங்கித் தோன்றும்
தண்பெரும் பௌவநீர்த் துறைவற்கு நீயும்"
—நற்றிணை, 291

நீர்பெயர்ந்து மாறியதால் வற்றிய அள்ளற் சேற்றின்கண் இருந்த 'நெய்த்தலைக் கொழுமீன்' அருந்த குருகுகள் இனமாக மணலில் ஏறி இருந்தன என்று நற்றிணைப் பாடல் கூறுகின்றது. இந்த 'நெய்த்தலைக் கொழுமீன்' இன்று எங்கும் எளியவர்களால் விருப்பமாக உண்ணப்படும் நெத்திலி மீனாகவே இருக்க வேண்டும். இந்த மீனின் தலையில் நெய் இருப்பதாகக் கொண்டு நெய்த்தலை என்று அழைத்தனர். ஆதலின் நெய்த்

தலைக் கொழுமீன் என்றனர். இந்த இன மீன்களின் உடலில் எண்ணெய் இருக்கும் என்று கூறுவர். கல் தலையில் இருப்பதாகக் கருதிய மீனைக் கற்றலை என்று வழங்கினதை இது சார்பாகக் கவனிக்க வேண்டும். இந்த மீனின் தலையில் நெய் இருப்பதாகக் கொண்டு நெய்த்தலை என்று பெயரிட்டனர். கொழுப்பு என்ற சொல் இறைச்சியில் இருக்கும் எண்ணெயைக் குறித்ததாகும். கொழு என்ற சொல் நெய்யையும் குறித்து வழங்கியிருக்கலாம். கொழுமீன் என்றாலே எண்ணெய் மீன் என்று பொருள் தந்திருக்கும். பிற்காலத்தில் கொழுமீன் என்ற பெயர் மறக்கப்பட்டு இந்த மீன் இதன் அடைமொழியாக வந்த நெய்த்தலை என்ற பெயராலே அழைக்கப்பட்டது. நெய்த்தலை என்பதே பின்னர் மக்கள் வாயில் (folk etymology) நெத்திலி (நெய்த்தொலி) என்று வழங்கியது. இந்த மீனைக் கூட்டமாக வலையில் பிடிப்பர். நெடுங்கடலில் கொழுமீனைக் கொள்வதற்காகப் பரதவர் திமிலில் அலைந்து பிடிப்பர் என்று கூறப்பட்டுள்ளது.

இந்த மீன் சுவையுடையதாயினும் எளியவர்களே மிகுதியாக உண்ணுகின்றனர். 'உமக்குரியதல்லாத இழிந்த கொழுமீன் வல்சி' என்று தலைவி கூறுவதாகச் சொல்லிய அகநானூற்றுப் பாடல் வரி கொழுமீன் எளியவர்களுடைய உணவாகச் சங்க காலத்திலேயே இருந்ததைத் தெளிவாக்கும். இன்றும் நெத்திலி மீன் கருவாடு ஏழை, எளியவர்களால் உண்ணப்படுகின்றது. இந்தக் கருவாட்டைச் சுட்டும் பொரித்தும் உண்பர். இந்தக் கருவாட்டை வறுக்குங்கால் வரும் புகைமணத்தை மக்கள் விரும்புவர். இந்த மீனின் கருவாட்டைக் கள்ளுடன் விரும்பி உணபதை இன்றும் காணலாம். மறுகில் கொழுமீனைச் சுடும் புகையால் துறை இனிதாக இருந்ததாக ஒரு நற்றிணைப் பாடல் (311) கூறியுள்ளது. கொழுமீனொடு கள்ளை உண்பதை ஒரு புறப்பாடல் கூறியுள்ளது. நீரற்ற சேற்று அள்ளலில் இருந்த கொழுமீனை உண்ணக் குருகுகள் வந்ததையும் சிறுவர்கள் உணவாகக் கொண்டதையும் இரு பாடல்கள் கூறியுள்ளன. கொழுமீன்கள் கடலிலிருந்து அலை ஏறும்போது ஆற்றிற்குச் செல்லும் என்று கண்டுள்ளனர். ஆதலின் ஆற்றில் நீர் வற்றும்போது சேற்றில் இந்த மீன்கள் அகப்படுவது இயல்பே. இதையே சங்கப் பாடல்கள் குறிப்பிட்டுள்ளன. கொழுமீனை நீர்நாய் விரும்பி உண்டதாக ஒரு பாடல் கூறியுள்ளது. நீர்நாய் பெரிய கொழுத்த மீனை உண்ணமுடியாது. ஆதலின் கொழுமீன் எனப்படும் நெத்திலிமீனையே நீர்நாய் விரும்பி உண்டதாகக் கொள்ளவேண்டும்.

கொழுமீனை அறிவியலில் Engraulis Indicus என்றழைப்பர். தமிழிலும் தெலுங்கிலும் நெத்திலி என்ற பெயரில் வழங்கு கின்றது. இதே இனத்தைச் சேர்ந்த மற்றொரு வகை மீனைப் பொருவா என்றழைப்பர். இந்த மீனைப் பிற்காலப் பள்ளு நூல்கள் குறிப்பிட்டுள்ளன. தெலுங்கில் பொருவாலு என் றழைப்பர். இதற்கும் உடலில் நெய் உண்டு. இந்த மீனை Engraulis purava என்றழைப்பர். இந்த அறிவியல் பெயரில் 'பொருவா' என்ற தமிழ்ப் பெயர் பயன்படுத்தப்பட்டுள்ளது.

௯. குழல்மீன்

சங்க நூல்களில் குழல் என்ற மீனைப்பற்றிச் சிறுபாணாற்றுப் படையில் மட்டும் ஒரு குறிப்பு வருகின்றது.

> "அறற்குழற் பாணி தூங்கி யவரொடு
> வறற்குழற் சூட்டின் வயின்வயிற் பெறுகுவிர்''
> —சிறுபாணாற்றுப்படை 162-163

கிடங்கில் என்ற ஊரின் அரசனைப் பாடி உலர்தலையுடைய குழல்மீனைச் சுட்டதனோடு கள்ளைக் கடற்கரையூரான எயில் பட்டினத்தில் வீடுதோறும் பெறுகுவிர் என்று சிறுபாணாற்றுப் படை வரிகள் கூறுகின்றன. குழல் என்ற மீன் பெயர் வழக்கு இன்றும் தமிழ்நாட்டில் சில இடங்களில் காணலாம். இதைப் பூந்தழல் என்றும் சில விடங்களில் அழைப்பர். இதைப் பால் மீன் என்று சென்னையில் வழங்குவதும் உண்டு. மற்ற இடங் களில் பால்கெண்டை, துள்ளு என்றும் அழைப்பர். இந்த மீன் கடலில் பத்தடி வரை துள்ளக்கூடியது. அதனால் துள்ளு எனப் பட்டது. தெலுங்கிலும் பால்மீன் என்ற பெயரே வழங்கு கின்றது. இந்த மீனிற்கு உடல் குறுகி நீண்டு உருண்டு இருக்கும். நீண்டு உருண்டு இருப்பதாலும் வாயில் பற்கள் இல்லாமல் குழல்போலத் தோன்றுவதாலும் குழல்மீன் எனப் பட்டது. இந்த மீன் கடற்கரைகளிலும் கழிகளிலும் ஆற்று முகங்களிலும் கிடைக்கின்றது. உள்நாட்டுக் குளங்களிலும் வளர்க்கப்படுகின்றது. சங்க காலத்தில் எயில்பட்டினமாகிய மரக்காணத்தில் இந்த மீனைச் சுட்டு உண்டனர் என்று கூறப் பட்டுள்ளது. இந்த மீன் மிகவும் சுவையுடையது. இந்த மீனை அறிவியலில் Seriolichthys bipinnulatus என்றழைப்பர்.

—— (தொடரும்)

> அடக்க முடையா ரறிவிலரென் றெண்ணிக்
> கடக்கக் கருதவும் வேண்டா—மடைத்தலையில்
> ஓடுமீ னோட உறுமீன் வருமளவும்
> வாடி யிருக்குமாங் கொக்கு. —மூதுரை-கசு

# ஒளிவிளக்கு

[டாக்டர் ஆர். இ. ஆஷர்
எடின்பரோ பல்கலைக் கழகம், பிரிட்டன்.]

தமிழாக்கம்: திரு. க. த. திருநாவுக்கரசு, எம். ஏ., எம். லிட்

அன்பிலும் அறிவாற்றலிலும் தலைசிறந்து விளங்கிய மனிதர் ஒருவரை, இம் மண்ணுலகம் இழந்துவிடுமானால் நமக்கு உண்டாகும் வருத்தம் அளவிடற்கு அரிது. இன்னும் சிறிது காலம், நம்முடன் அவர் இருந்திருந்தால், எவ்வளவு நன்றாக இருந்திருக்கும் எனும் துன்பம் தோய்ந்த ஏக்கம் அதனோடு இணைந்து தோன்றும். நம்முடைய மதிப்பிற்குரிய நண்பரும் ஆசிரியருமான டாக்டர் மு வரதராசனாரின் மறைவில் இது சிறப்புமிக்க உண்மையாகத் தோன்றுகிறது.

நாம் அவருடைய வாழ்க்கைப் பணியை எடுத்துக் கொள்வோம். தாம் பொறுப்பேற்ற ஒவ்வொரு பதவியிலும், தலைசிறந்த வெற்றியைப் பெற்றவராக அவர் விளங்கினார். சென்னைப் பச்சையப்பன் கல்லூரியில் பணிபுரிந்த காலத்தில் அவரிடம், பட்டக் கீழ் வகுப்பில் தமிழைப் படித்த மாணவர்களின் தலைமுறைகள் பலவாகும். அவர்கள் யாவரும், அவரிடம் சிறப்புற்று விளங்கிய ஆசிரியப் பண்புகளுக்கும் மனிதப் பண்புகளுக்கும் சான்றுகள் பல காட்டுவர். பின்னர், சென்னைப் பல்கலைக் கழகத்தின் தமிழ்த்துறைத் தலைவராகப் பணிபுரியச் சென்றபொழுது, ஆராய்ச்சியில் அவர் கருத்தைச் செலுத்தலானார். மதிப்புமிக்கனவாகவும், ஆய்வு மாணவரின் உள்ளத் திறனிற்கு உகந்தனவாகவும் உள்ள தலைப்புகளில் ஆய்வு செய்யுமாறு, தாமே நெறிப்படுத்துவதில் அவர் திறமை வாய்ந்தவராக விளங்கினார். அவருடைய ஆர்வமிக்க அகத்தூண்டுதல் கிடைக்காமல் போயிருந்தால், சிறப்புமிக்க வகையில் மதிநுட்பம் வாய்ந்த இளம் அறிஞர்கள் பலர் தமிழாய்வின் பல்வேறு துறைகளில், சிறப்பான முறையில், இப்பொழுது ஆராய்ச்சி செய்துள்ளதைப் போன்று செய்ய இயலாமற் போயிருக்கும். இறுதியாகக் குழவிப் பருவத்திலுள்ள மதுரைப் பல்கலைக் கழகத்தின் துணைவேந்தராக அவர் பணியாற்றினார் அப் பதவிக் காலம் எல்லாவற்றைக் காட்டிலும் மிகக் குறுகியதாகும். எதிர்பாரா வகையில், மிக விரைவில் அவருடைய நெறிப்படுத்தும் தலைமையை அது இழக்க நேரிட்டது. இதனால் தவிர்க்க முடியாத அளவிற்குப் பெரும் வருத்தம் அப் பல்கலைக் கழகத்திற்கு உண்டாயிருக்கிறது.

இனி, அவருடைய பேனாவிலிருந்து புதிய நூல்கள் வெளிப்படா. இதனாலும், ஆழ்ந்த வருத்தம் மிகவும் பரந்த நிலையில் உண்டாகும். டாக்டர் வரதராசனார் கலைக்கழக வாழ்விலிருந்தும் ஆட்சிப் பணியிலிருந்தும் ஓய்வுபெறும் தகுதிமிக்க உணர்வு நிலையை அடைவாரானால், முழுமையாகத் தம்மை எழுத்துப் பணியில் ஈடுபடுத்திக் கொள்ளுவார் என நம்மில் பலர் ஆர்வத்துடன் எதிர்பார்த்தோம். இதையே அவரும், ஆவலோடு எதிர்நோக்கிய வண்ணம் இருந்தார். எனவே இவ்வாறு நாம் எதிர்பார்த்தமை பெரிதும் நேரிய எண்ணமாகும்.

இந் நூற்றாண்டின் இலக்கிய வளர்ச்சியில் டாக்டர் மு. வ. வின் இலக்கியப் படைப்புகளின் விளைவு தன்னிகரற்றதாகும். அவற்றின் எண்ணிக்கையோடு பரப்பு அளவும் இணைந்தது. அவை பலவகையானவை; நிலையான உயர்ந்த தரமும் உடையவை. அவருடைய படைப்பு எவ்வகைத்தாக இருந்தாலும், அவை பொன்றாப் புகழை நிலைநாட்டுவதற்கு உரியனவாகும். எடுத்துக்காட்டாக அவருடைய 'நாவல்களை'க் கூறலாம். அவற்றின் சிறப்பை வருங்காலத்தில் பகுத்துணரக் கூடிய வாசகர்களின் தலைமுறைகள் மிகப் பலவாகும். அவர்களுக்கும் அவை தொடர்ந்து மகிழ்வூட்டும். நேர்முகமாகக் கதையை எடுத்துரைக்கும் முறையைக் கையாளுவதில், மற்றவர்களைக் காட்டிலும் அவர் மேம்பட்டு விளங்குகிறார். இதைப் போன்று, உள்ளடக்கத்திலோ, தமிழில் நாவல் எழுதும் கலைத் திறனிலோ அவர் மலைப்படையுமாறு புதிய மாறுதல்கள் எதையும் புகுத்தவில்லை எனச் சிலர் கருதலாம். இஃது ஓரளவிற்கு உண்மையுமாகும். ஆனால், அவரிடம் கதையைச் சொல்லும் முறையோடு, நவீன தமிழ் நாட்டின் நகர வாழ்க்கையைத் திறம்படப் படம்பிடித்துக் காட்டும் ஆற்றலும் ஒருங்கு இணைந்திருந்தது; நடப்பு சமூகப் பிரச்சினைகளையும், முக்கியமான அறநெறி, தத்துவ சிக்கல்களையும் ஆழமாக அலசி விவாதிப்பதில் அவர் கைதேர்ந்த கலைஞராவார்; மனிதப் பண்பையும் உணர்ச்சிகளையும் நிகழ்வியல்பாங்குடன் நுட்பமாகச் சித்திரிப்பதிலும் அவர் வல்லவர். இவற்றை எழுததோவியமாகத் தீட்டுகின்ற பொழுது சலிப்பூட்டும் பண்பையோ, மனச்சோர்வை உண்டாக்கி வெறுப்பூட்டும் இயல்பையோ அவருடைய கதை கூறும் முறையில் நாம் எப்பொழுதும் காண இயலாது. இத்தகைய நோக்கங்களை மிகச் சிக்கனமாகச் சாதிப்பதில் அவர் பெற்றிருந்த ஆற்றல் அவருடைய சிறு கதைகளிலும் புலனாகின்றன.

சற்றேறக்குறைய ஒரு நூற்றாண்டிற்கு முன்னர், முதல் தமிழ் நாவல் வெளியிடப்பட்டது. அக்காலம் முதல் இலக்கியத் தமிழ், பல்வேறு பேச்சுமொழி -கொச்சை தமிழ் வகைகளி லிருந்து வேறுபட்டு நிற்பதனால் உண்டாகும் பெரும்பிளவு தமிழ் நாவல், நாடக ஆசிரியர்களுக்குக் கடினமானதொரு பிரச்சினையைத் தோற்றுவித்து வந்துள்ளது. முழுமையாக, மனநிறைவு அளிக்கத்தக்க வகையில், இதுவரை யாரும் இப் பிரச்சினைக்குத் தீர்வு காணவில்லை எனலாம். தம்முடைய நாவல்களிலும் நாடகங்களிலும் டாக்டர் வரதராசனார் இச் சிக்கலுக்கு, சமரச உடன்பாடுமூலம் ஒருவகைத் தீர்வை வழங்கி யுள்ளார். அவருடைய அணுகல்முறை இச் சிக்கலுக்குத் தீர் வினைக் காணும் முயற்சியின் வெற்றிக்கு அருகே அழைத்துச் செல்லுகிறது.

கற்பனைத் திறன்மிகு இலக்கியத்தைப் படைப்பதில், டாக்டர் வரதராசனார் வெற்றி பெற்றுள்ளார். மொழியின் இயல் பினை அவர் நன்றாகப் புரிந்து கொண்டிருப்பது அவ் வெற்றிக் குரிய காரணங்களுள் ஒன்றாகும். மொழி பயிலும் மாண வர்களும் இலக்கிய மாணவர்களும் தங்களுள், ஒருவர் மற்றொருவரைப் புரிந்துகொள்ள இயலாமல் பெரிதும் தோல்வி யுறுகின்றனர். இஃது அவருக்குப் புரியாத புதிராக இருந்திருக்கவேண்டும். ஏனெனில், மொழியில் தீவிர மான ஆர்வம் கொண்டால் படைக்கும் பணியில் மொழியைப் பயன்படுத்துவதை (அஃதாவது பேரிலக்கியத்தைப் படைப் பதை) அறியத் தூண்டும் ஆர்வம் எழும் என்பதையும், அதே சமயத்தில் இலக்கியத்தில் ஆழ்ந்த ஈடுபாடு கொண்டால், இலக்கியம் படைக்கப் பயன்படும் ஆக்கப்பொருளான (அதாவது மனித மொழியிடத்து) அக்கறையின்மை தோன்ற இயலாது என்பதையும் அவர் நன்குணர்ந்தவராவர். எனவே, தம் முடைய எழுத்துகளில் இதை அவர் சிறப்பாகப் போற்றி யுள்ளார். அவருடைய நூல்களுள் காலத்தால் பெரிதும் முற் பட்டது 'மொழிநூல்' என்பதாகும். அவருடைய பரந்துபட்ட படிப்பினை இந்நூல் தெரிவிக்கிறது. தமிழ் இலக்கிய மரபுவழி வந்த நூல்களை மட்டும் அல்லாமல், மேலைநாட்டு மொழியியலை யும் அவர் நன்கு கற்றுள்ளதை இந் நூலினால் அறிகிறோம். தம் முடைய பரந்துபட்ட படிப்பின் பயனாகப் பெற்ற அறிவினைப் பல வகையான, இன்றியமையாத நுட்பங்களை உணர்த்தும் வகை யில் பக்குவப்படுத்தி, எந்த வாசகர்களைக் கருத்தில்கொண்டு இந் நூலை இயற்றினாரோ அவர்கள் எளிதில் புரிந்து கொள்ளத் தக்க வடிவில் இம் மொழி நூலினை அவர் இயற்றியுள்ளமை மிக

முக்கியமாகக் குறிப்பிடத்தக்கதாகும். உண்மையில், இங்கு அவருடைய ஆற்றல்களுக்குரிய ஓரியல்பு பொதிந்து கிடக்கிறது. அவர் மதிநுட்பம் வாய்ந்த ஓர் அறிஞர். ஆனால், அவர் போலிப் பகட்டு ஆரவாரம் வாய்ந்த அறிஞர் அல்லர். தம்முடைய கல்விநிலைக் கொத்த அறிவுத்திறன் இல்லாத மக்களுக்கு, தம்முடைய கல்வியறிவின் பயனை வாரி வழங்குவதை அவர் என்றுமே இகழ்வாகக் கருதவில்லை. கருத்துகளைச் சிதைக்காமல், எளிமைப்படுத்தியுரைக்குந்திறன் அவருக்குக் கைவந்த கலையாகும். இவ் வியல்பு மொழியைப்பற்றி அவருடைய சிறு நூல்களான 'மொழியின் கதை, 'எழுத்தின் கதை','சொல்லின் கதை' என்பனவற்றுள் சிறப்புற்று விளங்குவதைக் காணலாம்.

பல்வேறு படிநிலையான வாசகர்களுக்கு, அறிவுறுத்துவதில் அவர் வல்லவராக விளங்கினர். வெறறிமிகு அத்திறமை அவருடைய செந்தமிழ்ப் பாக்களின் ஆய்விலும் நன்கு வெளிப்படுகிறது. பண்டைக்காலத்திய தமிழிலக்கியப் பாக்களைப் பற்றி, அவர் திறனாய்வு முறையில் வெளியிட்ட மதிப்பீடுகளைப் படித்த பிறகு பெற்ற தெளிவுடன், அவற்றின் மூல இலக்கியங்களைப் படித்து, புரிந்துகொண்ட பெருமக்கள் எண்ணற்றவராவர். இதைவிட மிகப் பேரளவில் பயனடைந்தோர் அவருடைய சங்க இலக்கியத் திரட்டுகளை முதலில் படித்துப் பயன் பெற்றோர் என உறுதியாகக் கூறலாம். அத்தகையோர் மிகப் பலராக உள்ளனர். எட்டுத்தொகை நூல்களுள் குறிப்பிட்ட சிலவற்றின் சிறப்புமிக்க பாடல்களைத் தேர்ந்தெடுத்து, அவற்றை மூலவடிவத்தில் (அல்லது சிறிது மாற்றிப் பதிப்பித்து) தந்து, அவற்றின் உட்பொருளையும் நயமிகு கருத்துகளையும் எளிய முறையில், அவர் எடுத்துரைத்ததைப் படித்து மகிழ்ந்தோர் பலராவர். பிறகு, மூலநூல்களைப் படித்துப் புரிந்து கொள்ள இந்நூல்கள் அவர்களுக்குப் பேருதவி புரிந்தன. இத்தகைய நூல்களின் பெயர்களோடு அவர் 'விருந்து' எனும் சொல்லைச் சேர்த்து வழங்கியமை சாலவும் பொருத்த மிக்கதாகும்.

கருத்துவள மிக்க மனத்தை உடையவர் டாக்டர் வரதராசனர். இதனால், அவர் கதையை விளக்கி யுரைப்பதையே முதன்மையான நோக்கமாகக் கொண்டிருக்கும் நேரத்திலும், உரிமைக் கோரிக்கைகளை எழுப்பும் எண்ணங்களை வெளிப்படுத்துவதைத் தவிர்க்க இயலாத தன்மையுடையவராக அவர் விளங்கினர். ஆயினும் அடிக்கடி, அவருடைய நோக்கங்களும் சிந்தனை தரும் விளக்கங்களும் மிகவும் தளராது நீடித்த வளர்ச்சியைப் பெறவேண்டிய நிலையில் இருந்தன. இதனால், நாம்

அவருடைய கட்டுரைகளின் தொகுதிகள் பலவற்றைப் பெற முடிந்தது. இலக்கியம், அரசியல், கல்வி, பிற பொருள்கள் பற்றி அவர் வரைந்த கட்டுரைகள் பல தொகுதிகளாக வெளி வந்துள்ளன. அவை யாவும், ஆசிரியரின் சிந்தனை ஆழத்தை அறிவதற்குமட்டும் அல்லாமல், அவர் சொல்ல நினைத்ததை எவ்வாறு நயமுற எடுத்துரைத்துள்ளார் என்பதை உணரவும் படிக்கத் தக்கனவாகும். படைப்பு இலக்கியம், படைப்பு இலக் கியம் சாரா நூல்கள் எனும் வெளிப்படையான பாகுபாடு டாக்டர் வரதராசனரின் படைப்புகளுக்குப் பொருந்துவன அல்ல. கற்பனை வளமிக்க இலக்கியத்தைப் படைக்கின்ற பொழுதாகிலும் சரி, அல்லது சமுதாயச் சிக்கல்களைப் பற்றிய விவாதமாக இருந்தா லும் சரி, அவை இரண்டிலும் ஒரே சீரான படைப்பு இலக்கிய எழுத்தாளராக அவர் விளங்குகிறார். .எனவேதான், அவருடைய அறநெறிக் கருத்துகளைக் கடிதங்களின் வடிவில் கட்டுரைகளாக எழுதிப் பெருவெற்றி பெற்றுள்ளார் ('அன்னைக்கு' முதலியன.)

தம்முடைய தாய்மொழி அல்லாமல், பிறமொழிகள் பற்றிய கணிசமான அறிவை அவர் பெற்றிருந்தார். எனினும், தம் முடைய பிறமொழி அறிவை வெளிப்படுத்தும் வகையில் அவர் ஆரவாரம் ஒன்றும் செய்யவில்லை. இதன் விளைவாக, அவர் ஆங்கிலத்தில் எழுதியவற்றின் முக்கியத்துவத்தை எளிதில் உணர முடியாமல் போகிறது. அவர் அவ்வப்போது ஆங் கிலத்தில் எழுதிய எழுத்துரைகளை ஒன்றாகச் சேர்த்துப் புத்தக வடிவில் காண்பது மகிழ்வூட்டுவதாகும். இவ்வாறு செய்வோ மாயின் அவருடைய பெரிய வெளியீடான "பழந்தமிழ் இலக் கியத்தில் இயற்கை" (The Treatment of Nature in Sangam Literature, Madras, 1957) என்னும் நூலோடு ஒருங்கு வைத்துக் காண இயலும். தமிழில் உள்ளதைப்போன்று, ஆங்கிலத்திலும், மக்கள் கருத்தைக் கவர்ந்த இளங்கோவடி களின் மாபெரும் படைப்பான சிலப்பதிகாரத்தில் தம்முடைய கருத்தைச் செலுத்தியுள்ளார். அதன் பயனாக, ஆங்கிலத்தில் 'இளங்கோவடிகள்' எனும் ஆய்வு நூலை அக மகிழ்வுடன் இயற்றியுள்ளார் (சாகித்திய அக்காதெமி, புது தில்லி, 1967).

டாக்டர் மு. வரதராசனர் தம்முடைய சொந்தப் படைப்பு முயற்சியின் மூலம் தமிழிற்கு வழங்கியுள்ள கொடை பேரளவின தாகும். மற்றும், தனிச்சிறப்பு வாய்ந்த தம்முடைய இலக்கிய, பண்பாட்டுப் பாரம்பரியத்தை நாட்டுமக்கள் பெரிதும் உணர்ந்து போற்றத்தக்க வகையில் அவர் சாதித்துள்ள சாதனையும், தமிழிற்கு அவர் வழங்கியுள்ள மிகப் பெருங்கொடை யாகும். தமிழில் நயமிகு உரைநடை வளர்ச்சிக்கு அவர் ஆற்றி

யுள்ள அரும்பணி இதற்கு எவ்வகையிலும் சிறப்பில் குறைந்தது அன்று. அவருடைய உரைநடை ஆற்ெெழுக்கானது; தெளிவானது; படிகம் போன்றது. இவ்வகையில், பிரெஞ்சுமொழியில் வால்டேரின் வனப்புமிகு உரைநடையையும், ஆங்கில மொழியில் ஜார்ஜ் பெர்னட்ஷாவின் செறிவான தெளிவுமிக்க உரைநடையையும் போன்றதாக டாக்டர் மு. வ. அவர்களின் உரைநடை விளங்குகிறது. மிக எளிமையாக எடுத்துரைக்குந் திறன் மூலமாக இத் தெளிவுமிகு செந்தமிழ் நடை, நம் ஆசிரியருக்குக் கைவரப் பெற்றது எனக் கூறுவதற்கு இல்லை. ஆனல் அவர் சொற்றொடர் அமைப்புகளை அடக்கமானவையாக அமைத்துள்ளார்; சரியான சொற்களைத் தேர்ந்து எடுப்பதில் மிகுந்த அக்கறை காட்டியுள்ளார்; சொற்களையும், சொற்றொடர்களையும் சமநிலை கெடாதவாறு ஒத்த நிலையில் அமைத்துள்ளார். இவ்வக்கறையும் கருத்து ஊற்றமும் அவருடைய நடையினைத் தெளிவுமிக்கதாகச் செய்துள்ளன. மிகச் சிக்கலான முழு வாக்கியத்தைக்கூட, எளிதில் சிக்கலகற்றித் தெளிவாகப் பகுத்து விடலாம். குழம்பிய சிந்தனையின் விளைவாகவோ, தேவைப் படும் மிகப் பொருத்தமான சொல்லைப் பயன்படுத்த இயலாமையால் உண்டாகும் சோர்வினலோ ஏற்படும் படபடப்பும் பதற்றமும் அவருடைய நடையில் இடம்பெறவில்லை.

இருபதாம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் தமிழ் நூலாசிரியருக்கு மலைப்பைத் தரும் சிக்கல்கள் பலவாகும். அவற்றுள் தம்முடைய சொற்களஞ்சியத்தின் மூலாதாரக் கடுஞ் சிக்கலைப் பற்றிக் கருத்தற்றவராக அவர்கள் யாரும் இருந்து விட இயலாது. இலத்தீன், பிரெஞ்சு மொழிகளிலிருந்து கடன் வாங்கப்பட்ட சொற்கள் ஆங்கிலத்தில் இரண்டறக் கலந்து விட்டன. இதைப் போன்று, பிற மொழிகளிலிருந்து கடன் வாங்கப்பட்ட சொற்கள் - சிறப்பாக சமக்கிருத மொழியிலிருந்து கடன் வாங்கப்பட்ட சொற்கள் தமிழ்ச் சொற்களஞ்சியத்தினை வளமுறச் செய்துள்ளதைப்பற்றி வாதிடலாம். அல்லது மிக அருகிலுள்ள மலையாளமொழியின் போக்கை எடுத்துக் காட்டாகக் காட்டலாம். மலையாள மொழியில் சமக்கிருதம், ஆங்கிலம் ஆகிய இருமொழிச் சொற்களும் எளிதில் பயன் படுத்தக்கூடிய வழக்குச் சொற்களாக வந்துவிட்டதைக் குறிப் பிடலாம். எனினும், இவ் வாதம் தமிழ்நாட்டில் உடனடியான அன்பாதரவைப் பெறக்கூடியதாக இல்லை. இதிலிருந்து தமிழ் வேறுபட்டது என்னும் கருத்தினை நிலைநாட்ட உணர்ச்சிக் கனிவோடு கடுமையாக வாதம் செய்ய இயலும். இக் கருத்தை மிக உறுதியாக ஆதரிக்கும் தற்கால எழுத்தாளர்கள் சிலராவர். அவர்கள், நன்கு பழக்கப்பட்ட சமக்கிருத மொழிச் சொற்

களுக்கு மாற்றாக, மறக்கப்பட்டு விட்ட தொன்மைத் தமிழ்ச் சொற்களைத் தேடிப் பயன்படுத்த முயலுகின்றனர். இதன் விளைவாகத், தங்கள் எழுத்தோவியங்களில் தெளிவற்ற, புரியாத சொற்களை அவர்கள் புகுத்தியுள்ளனர். தம்முடைய நடையின் முக்கியப் பண்பான தெளிவினைத் தியாகம் செய்யாமலே, தூய நடை ஒன்றைப் பின்பற்றி டாக்டர் வரதராசனார் வெற்றி பெற்றுள்ளார். இஃது அவருடைய மதிநுட்பத்தின் தனிப்பெருஞ் சிறப்பாகும். இது, தம்முடைய சமகாலத்து எழுத்தாளர்களின் எழுத்துகளைவிட, ''எளிதில் பேரளவிற்கு அல்லது முழுமையான அளவிற்கு சமக்கிருதச் சொற்களின் உதவியில்லாமல் தமிழ் மொழி இயங்க இயலும். அச் சமக்கிருதச் சொற்களைக் கைவிடுவதன்மூலம் தூய்மை நிறைந்ததும் நேர்த்தி வாய்ந்தது மான நடை நயத்தை நோக்கித் தமிழ்மொழி சிறப்புற முடியும்'' (திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம், சென்னை, 1956, பக். 47) எனும் கால்டுவெல்லின் கருத்துரையைத் தக்கவாறு பாராட்டும் நினைவுச் சின்னமாக அவருடைய எழுத்தோவியம் விளங்குகிறது.

சிறந்த உரைநடைப் பண்புகள் அனைத்தும் முழு நிறைவாக அவருடைய தமிழ் வசனத்தில் இடம்பெற்றுள்ளன. எனவே சிறந்த தமிழ் நடைக்கு நல்லதொரு முன் மாதிரியாக அஃது அமைந்துள்ளது என நாம் துணிந்து கூறலாம். இதற்குப் பல்வேறு காரணங்கள் உள்ளன. உரை நடைக்கதை, நாடகம், கடிதங்கள், கட்டுரைகள், இலக்கியத் திறனாய்வு, வாழ்க்கை வரலாறு, தொழிலியல் பற்றிய நுட்பமான ஆய்வுரைகள் போன்ற பல்வேறுபட்ட நோக்கங்களுக்குப் பயன்படும் இலட்சியக் கருவி 'உரைநடை' என்பதைத் தம் எழுத்தின் மூலம் அவர் மெய்ப்பித்துக் காட்டியுள்ளார். இதிலிருந்து பொது மேடைகளில் பேசுவதற்குத் தக்க ஆற்றல் வாய்ந்த கருவியாக அது விளங்கவேண்டும் என்பது பெறப்படவில்லை. எனினும், இதுவே உண்மை. பல திறப்பட்ட பொருள்களைப் பற்றிய அவருடைய எண்ணற்ற பேருரைகளை வகைக்கு ஓர் எடுத்துக் காட்டாக நாம் பதிவு செய்துவைக்கத் தவறிவிட்டோம். எனவே, இப்பொழுது அவருடைய குரலை மீண்டும் கேட்பதற்கு வாய்ப்பு இல்லையே என வருந்தக்கூடிய நிலையில் உள்ளோம்.

டாக்டர் மு. வரதராசனார் சிறப்புமிக்க எழுத்தாளர் என்பதற்காகவும், பேச்சாளர் என்பதற்காகவும் நாம் அவரைச் சிறப்பாக வியந்து பாராட்டலாம். எனினும், இவற்றைவிட, தம்முடைய நண்பராக அவரை மதித்துப் பழகும் தனிச் சலுகையை நாம்

பெற்றிருந்தோம். எனவே, நமக்கு நல்லதொரு நண்பரை இழந்துவிட்டதால் உண்டாகும் துன்பம் பெரிதாகும். 'அவருடைய வாழ்க்கையின் உயர்பண்புகளை எண்ணியே, அவருடைய நினைவினை நாம் மிகவும் மதித்துப் போற்றுகிறோம். இவ்வாறு போற்றுகின்றபொழுது, நம்முடைய எண்ணங்கள் கட்டாயமாகத் திருக்குறளை நாடுகின்றன. ஒரு பக்கம் வள்ளுவரின் திருக்குறளையும் மற்றொரு பக்கம் இன்றைய தமிழில் அதற்கு விளக்கமும் வரைந்து 'திருக்குறள் தெளிவுரை' என்று டாக்டர் மு. வ. அவர்கள் ஒரு நூலை வெளியிட்டுள்ளதை நாம் நன்கு அறிவோம். அவருடைய முதல் வெளியீடுகளில் முக்கியமானதும், பலமுறை மறுபதிப்புகள் வெளி வந்ததும் இந்நூலேயாகும். இந்நூலோ, இன்றைய வாழ்க்கைக்குப் பழைமையான குறட்பாக்கள் பொருந்துமாற்றைப் புலப்படுத்தும் அவருடைய பெருநூல்களில் ஒன்றான 'திருவள்ளுவர் அல்லது வாழ்க்கை விளக்கம்' எனும் நூலோ வெறும் தற்செயல் நிகழ்ச்சியாகப் படைக்கப்பட்டன அல்ல. அவருடைய புதினங்களில் வரும் கதைப் பாத்திரங்கள், திருக்குறளை மேற்கோளாகக் காட்டுவதும் அல்லது அப் புதினங்களில் திருக்குறளின் கருத்துகளை உணர்ச்சிக்கனிவுடன் விளக்கியுரைப்பதும் வாயளவில் அம் மாண்புமிகு நூலிற்குத் தெரிவிக்கும் மரியாதை அன்று; அல்லது அன்றைய நாள் வண்ணத்தின் பழக்கத்தால் போற்றப்படும் போற்றுதலும் அன்று. ஒருவகையில் திருக்குறளில் பொதிந்துள்ள கருத்துகளின் திருவுருவமாக அவர் விளங்கினார். அவரால் மிகப் பெரிதும் மதித்துப் போற்றப்பட்டது திருக்குறள். அதனுடைய கருத்துகளையும் அவருடைய வாழ்க்கை முறையையும் ஒப்பிட்டு, பல ஒத்த கருத்துகளை எடுத்து விளக்கி, நாம் ஒரு நூலை எழுதலாம். இரண்டோர் எடுத்துக் காட்டுகளை அங்கொன்றும் இங்கொன்றுமாக நாம் இங்குச் சுட்டலாம். 'மக்கட் பேறு' எனும் அதிகாரத்தை மகிழ்வூட்டி மயக்கும் உணர்ச்சிகளின் வெளிப்பாடாக மட்டும் அவர் கருதவில்லை. இருபது ஆண்டுகளுக்கு முன்னர், தம்முடைய பிள்ளைகளோடும், பின்னர்த் தம்முடைய பேரப்பிள்ளை புகழேந்தியோடும் அவர் கொஞ்சி மகிழ்ந்ததை நேரில் கண்டு மகிழ்ந்தவன் நான். இவ்வாறு அவர் தம் மக்களோடு உள்ளம் கலந்து, மகிழ்ந்து விளையாடியமை,

> "மக்கள்மெய் தீண்டல் உடற்கின்பம் மற்றவர்
> சொற்கேட்டல் இன்பஞ் செவிக்கு" (குறள் 65)

> "குழலினி து யாழினிது என்பதம் மக்கள்
> மழலைச்சொற் கேளா தவர்" (குறள் 66)

எனும் குறட்பாக்களை அவர் ஆழமாக உணர்ந்திருந்ததையும், உண்மைப் பொருளை நன்கு புரிந்துகொண்டிருந்ததையும் புலப் படுத்தின. வள்ளுவரின் இக் கருத்துகளுக்குச் சிறப்புமிக்க இலக்கியமாக அவர் திகழ்ந்ததைக் கண்டபொழுது என் உள்ளம் பெரும் பூரிப்பு அடைந்தது.

தம்முடைய வாழ்க்கையில், யார் ஒருவர் நம்மிடம் மிகுந்த அன்பு பாராட்டினாலும், அவரைப் பற்றி ஆழ்ந்து நாம் நினைக் கின்றபொழுது, அவருடைய பண்புகளுள் நம்மை மிகப் பெரிதும் கவர்ந்தவை நம் மனக்கண் முன்னால் திரைப்படம்போல் காட்சி தருவது இயற்கை. அவரைப் பற்றிய நம் நினைவுகளை மீண்டும் நம் மனத்திரையில் ஒட்டிப் பார்க்கின்றபொழுது, அவை அனைத்துமே மகிழ்வூட்டுவனவாக உள்ளன. டாக்டர் மு. வ. அவர்கள் ஒப்பாரும் மிக்காருமின்றி பெருஞ்சிறப்புற்று விளங்கியதற்குரிய காரணங்கள் பல. அவற்றுள் இவ்வியல்பும் ஒன்றாகும். நான் அவரைப் பல இடங்களில் சந்திக்கும் பேற்றினைப் பெற்றிருக்கிறேன். வட இந்தியாவிலும், தென் இந்தியாவிலும், மலேசியா, பிரான்சு, பிரிட்டன் போன்ற நாடு களிலும் நான் அவரைச் சந்தித்து அளவளாவும் வாய்ப்பினைப் பெற்றேன். அவருடைய வருகையால் ஒவ்வோரிடமும் சிறப்பு மிக்கதாகத் தோன்றியது. 1973ஆம் ஆண்டில், எடின்பரோவில், காமன்வெல்த்து பல்கலைக் கழகத் துணைவேந்தர்கள் மாநாடு நடைபெற்றது. அம் மாநாட்டில் அவர் கலந்துகொண்டது சிறப்பாக எனக்கு மகிழ்வூட்டியது. அதிலும், சிறப்பாக ஸ்காட் லாந்தின் வனப்புமிகு குன்றுகளுக்கும், எழில்மிகு ஏரிகளுக்கும், சிறப்புமிகு சிற்றோடைகளுக்கும் என் குடும்பத்தோடு நாங்கள் அவருடன் சுற்றுலா மேற்கொள்ள அவருக்கு நேரம் கிடைத்தமை எனக்குப் பெருமகிழ்ச்சி அளித்தது. அவ்வின்பப் பயணத்தின் பொழுது, தம்முடைய இனிய பண்புகளாலும் நயவுரையாலும், நல்ல நகைச்சுவையாலும் என்னுடைய இரு சிறு மகன்களை அவர் கவர்ந்து விட்டார். அவர்களுடைய மகிழ்ச்சிக்காக, அவர் சொல்லிய கதைகளும் அவர்களுடைய மனத்தைக் கொள்ளை கொண்டுவிட்டது.

டாக்டர் மு. வ. அவர்களுக்கு நான் கடமைப்பட்டுள்ளதைச் சொற்களால் எடுத்துரைக்க இயலாது. அவர்களுக்குத் தனிப் பட்ட வகையில், நான் நன்றி செலுத்தக் கடமைப்பட்டுள்ளதை வேறோர் இடத்தில் தெரிவித்துள்ளேன். எனினும், மீண்டும் ஒரு முறை அவ்வாறு செய்வது பொருத்தமுடையதாகத் தோன்றுகிறது. வட ஆர்க்காடு மாவட்டத்தில் உள்ள செங்கம் எனும் ஊரில், மொழியியல் ஆய்வுக் களப்பணிக்காக மூன்று

மாதங்கள் தங்குவதற்கு நான் 1955ஆம் ஆண்டு குளிர் காலத்தில் சென்னை வழியாகச் சென்றேன். அப்பொழுது தான் முதன்முதலாக நான் அவரைச் சந்தித்தேன். நான் சென்னைக்குத் திரும்பிய உடனே, தம்மோடு தொடர்புகொள்ளு மாறு அவர் வற்புறுத்தினர். அவ்வாறு செய்ய நான் திட்ட மிட்டிருந்தேன். திரும்பியவுடன் அவரோடு தொடர்பு கொள்ளு வதற்கு முன்பே, ஓரிரு இரவுகளை எழுமூர் இரயில் நிலையத்திற்கு அருகில் இருந்த உணவு விடுதி (ஓட்டல்) ஒன்றில் தங்கிக் கழிக் கலாம் என்று எண்ணிக்கொண்டிருந்தபொழுது, என்னைத் தேடிக்கொண்டு அவர் அங்கு வந்துவிட்டார். மு. வ. என்றும் தம்மை உயர்ந்தவராகக் கருதியவர் அல்லர். சமுதாயத்தில் தாம் பெற்றிருந்த மதிப்பிற்கும், உயர்வு சிறப்பிற்குரிய மதிப் பினைப் பிறர் தரவேண்டும் என்றும் அவர் காத்திருப்பதும் இல்லை. அவருடைய ஆளுமையின் இந்த இயல்பு, தமக்கு யார் கடிதம் எழுதியிருந்தாலும், அதற்கு அவர் தவறுமல் பதில் எழுதி வந்துள்ளமையாலும் வெளிப்படுகிறது. அவருடைய பதில் தமிழிலோ, ஆங்கிலத்திலோ இருந்தாலும் பொதுவாகத் தட்டச்சு செய்யப்பட்ட சடங்கியல்பான குறிப்பாக அஃது இருப் பதில்லை. ஆனல், தாமே, தம் கையினல் எழுதிய கடிதமாக அல்லது அஞ்சலட்டையாக அஃது இருக்கும்.

"பெருமை பெருமித மின்மை" (குறள் 979)

சென்னை நகரத்து உணவு விடுதியில் என்னைக் கண்ட ஓரிரு நாட்களில், நான் தங்குவதற்குத் தகுதியும் வசதியும் மிகுதியாகவுடைய ஓர் இடத்தை, அவர் ஏற்பாடு செய்து தந்தார். மற்றும், எனக்குச் செந்தமிழைப் பயிற்றுவிக்க ஓர் ஆசிரியரையும், மொழியியல் ஆய்விற்குத் தகவல் கொடுப்பவர் ஒருவரையும் அவர் அமர்த்திக் கொடுத்தார். சில மாதங் களுக்குப் பிறகு சென்னையில் கோடைக்காலம் வந்தது. உடனே, என்னைக் கடுமையான கொடிய கோடை வெப்பத்தில் வாடு மாறவிட அவர் விரும்பவில்லை. எனவே, தாமும், தம்முடைய குடும்பமும் குன்னூருக்குச் செல்லும் இரயில் வண்டியில் ஓரிடத்தைப் பதிவு செய்யுமாறு என்னை வேண்டினர். இல்லை! எனக்கு அறிவுறுத்தினர் என்றே நான் சொல்லவேண்டும். தம் முடைய எழுத்துப்பணி, யாதோர் இடையூறுமின்றித் தொடர்ந்து முன்னேற்றம் காண்பதற்கு ஒரு வாய்ப்பாகக் கருதியே, அவர் நீலகிரியில் தங்கி இருந்தார். அப்பொழுது, என்னுடைய ஆராய்ச்சிப் பணிபற்றிக் கலந்து உரையாடவும், 'திருக்குறள் தெளிவுரை', 'குறுந்தொகை விருந்து' என்னும் நூல்களின் பகுதிகள் சிலவற்றை எனக்கு விளக்கவும் அவர் தம்

முடைய நேரத்தின் ஒரு பகுதியை ஒதுக்கினர். எங்கள் பணி அமர்வுகள் ஒன்றின்பொழுது நடைபெற்ற நிகழ்ச்சி ஒன்று, இப்பொழுதும் என் உள்ளத்தில் பசுமையாக இருக்கிறது.

ஒரு நாள் நல்லெண்ணம் வாய்ந்த, ஆனல், ஒருவகை மனச் சலிப்பு ஊட்டுகின்ற ஆங்கிலேய அம்மையார் ஒருவர் வந்தார். அவரை ஒருவகைப் பொழுதுபோக்குச் சமயப் பரப்புநர் எனலாம். டாக்டர் மு. வ. அவர்களிடம், இந்து தருமத்தைவிடத் தாம் மெய்யெனக் கருதும் கிறித்துவ சமய அறங்களின் உயர்வையும் சிறப்பையும் அந்த அம்மையார் விளக்கலானர். பற்றற்ற பார்வையாளருக்கு அவ்வம்மையாரின் சொற்கள் வசைபுராணமாகவே தோன்றும். எனினும், பொறுமையுடனும் அருளிரக்கத்துடனும் இருந்த புறச்சமயத்தைச் சார்ந்த மு. வ. அவ்வம்மையின் பலவீனமான வாதங்களைத் தகர்த்து எறிந்து, மனம்புண்படுமாறு யாதும் சொல்லவில்லை. விரும்பி இருந்தால், மிக எளிமையாக அவ்வாறு அவர் செய்திருக்கலாம். இதற்கு மாருக, நெடுநேரம் அவ்வம்மையாரைப் பேசவிட்டு, மனத் தாங்கல் யாதும் இன்றி அவ்விடத்தை விட்டுப் போகுமாறு அவர் செய்தார்.

நான் இரண்டாவது முறையாகத் தென்னிந்தியாவிற்கு வந்திருந்தேன். (1963—64). அப்பொழுது சென்னையிலும், ஓய்வகமான பெங்களூரிலும் அவரும், அவருடைய குடும்பத்தினரும் மீண்டும் என்னைப் பேரன்போடு விருந்தோம்பினர். நான் 'டைபாய்ட்' காய்ச்சலால் துன்புற்றபொழுது, அவர் என்னிடம் காட்டிய ஆர்வமிக்க அக்கறையையும் உள்ளார்ந்த கவலையையும் என்னல் மறக்க இயலாது. அச்சமயத்தில், அவருடைய மூன்று மகன்களில் டாக்டர் திருநாவுக்கரசு ஒருவரே மருத்துவராகி இருந்தார். தம்முடைய திறமையும் செயலுரமும் வாய்ந்த பாதுகாப்பினை அளித்து, என்னை மிகவும் கருத்தாக டாக்டர் அரசு கவனித்தார்.

1966, 1968 ஆம் ஆண்டுகளில் முதல் இரண்டு உலகத் தமிழ் மாநாட்டுக் கருத்தரங்குகள் நடைபெற்றன. அதனல், மீண்டும் நான் தமிழகத்திற்கு வருகைதர இயன்றது. மீண்டும், சென்னைச் செல்லம்மாள் தெருவில் எனக்கு அன்பான வரவேற்பு அளிக்கப்பட்டது. எப்பொழுதும்போல மு. வ. அவர்கள் ஓய்வின்றிக் காணப்பட்டார். எனினும், 1968இல் சென்னைப் பல்கலைக்கழகத்தில் நான் ஆற்றவேண்டிய சொற்பொழிவு குறித்து, நான் அவரிடம் கலந்துரையாட, எனக்குப் போதிய நேரத்தை அவர் ஒதுக்கினர். அவரோடு இத்தகைய சந்திப்புகளால் பெற்ற சலுகைகளிலிருந்தும், மதிப்பிட்டு உரைக்க

இயலாத அவருடைய நட்பைப் பரிசாகப் பெற்றதிலிருந்தும் தனிப்பட்ட நிலையிலும், கலைக்கழக வாழ்விலும் நான் பெற்ற பயன்களைக் கணித்து உரைக்க இயலாது.

நம்முடைய வாழ்நாளில், மீண்டும் ஒருமுறை டாக்டர் மு. வரதராசனர் அவர்களைப் போன்ற மனிதர் ஒருவரை நாம் சந்திக்கப்போவதில்லை. தமிழில் அவர் ஆற்றியுள்ள அரும்பணி ஒப்புயர்வற்றது அவருடைய எழுத்துரைகளைத் தொகுத்து மொத்தமாக நோக்கினாலும் அவர் தமிழிற்கு வழங்கியுள்ள கொடை தன்னிகரற்றதாகத் தோன்றுகிறது. பண்டைத் தமிழ் இலக்கியத்தின் சீரையும் சிறப்பையும் நமக்குத் திறம்பட உணர்த்தியுள்ளார்; இன்றைய வேறுபட்ட உலகின் வாழ்க்கைக்கு அவை எவ்வாறு பொருத்தம் உடையன என்பதை நம் உள்ளத்தில் ஆழப்பதியுமாறு அவர் எடுத்துரைத்துள்ளார். இவ் விருவகையிலும் அவர் ஒப்பாரும் மிக்காரும் இன்றித் தமிழிற்குப் பெருஞ்சிறப்பைத் தேடித் தந்துள்ளார். மற்ற எந்த உரையாசிரியர்களைக் காட்டிலும், தமிழ்மொழியின் தமிழ்த் தன்மையை உணர்ந்து போற்ற, அவர் நமக்கு உதவி புரிந்துள்ளார். இதன்மூலம், 'உலகின் பிற பகுதிகளுக்குத் தமிழ்ப் பண்பாடு வழங்கக் கூடியவை யாவை?' என்பதை நன்ருகப் புரிந்துகொள்ளுமாறு அவர் செய்துள்ளார். அவருடைய ஆளுமையின் கனிவையும் அகத்தூண்டுதலின் ஆற்றலையும் ஒத்த நிலையுடையனவாக நாம் மதித்துப் போற்றுகின்ருேம். 'வாழ்க்கை விளக்கமாக'த் திருவள்ளுவரை அவர் நமக்குத் தந்திருக்கிருர். மனிதன் என்னும் முறையில் அவரை நாம் நன்கு அறிவோம். இவ்வாறு எண்ணுகின்ற பொழுது நம்முடைய வாழ்க்கையில் ஓர் ஒளியாக அவர் விளங்கியதை நாம் இன்றும் உணர்கின்ருேம். (இத்தகைய ஒப்புமைகளை அவர் அறவே வெறுத்து ஒதுக்கியவர் என்பது உண்மை). அவருடைய மறைவால் அந்த ஒளி மங்கிவிட்டதாகத் தோன்றுகிறது. எனினும், பல வழிகளிலும் பல துறைகளிலும் அவர் நமக்குக் கற்பித்த அனைத்தையும் மறவாமல் நினைந்து போற்றுவோமாக! அவருடைய நினைவைப் போற்றும் தகுதியுடையவர்களாக வாழ நாம் முயலுவோமாக! இவற்றை நாம் செம்மையாகச் செய்வோமாளுல், அந்த ஒளி இன்றும் சுடர்விட்டு நமக்கு வழிகாட்டும் ஒளிவிளக்காக விளங்கும் என்பது உறுதி.

"அன்புநாண் ஒப்புரவு கண்ணேட்டம் வாய்மையொடு
ஐந்துசால்பு ஊன்றிய தூண்"

(குறள் 983)

——

# ஆட்சிமொழித் துணுக்குகள்

[கீ. இராமலிங்கனுர், எம். ஏ.
உறுப்பினர், ஆட்சிமொழிக்குழு, தமிழக அரசு]

Additional, Joint இணை; பிணை.

Additional ; இச்சொல் Joint என்னும் சொல்லைக் காட்டிலும் உயர்ந்த பொருளில் பயன்படுத்தப் பெறுகிறது. 'Additional Secretary', 'Joint Secretary', 'Additional Director', 'Joint Director' என்னும் வழக்குகளை யறிவோம்

ஒருதுறைக்கு Secretary உரிய அதிகாரங்களைப் புரிய இருவரை அமர்த்தவேண்டிய தேவையேற்படும்போது பணியில் மூத்தவரை Secretary என்றும். அடுத்தவரை 'Additional Secretary' என்றும் சொல்லுகிருேம். Secretary நிலையில் முடிவு செய்யவேண்டிய அத் துறையின் பொருள்களில் ஒரு பகுதியை Additional Secrerary க்கு ஒதுக்குவர். அப் பொருள்களைப்பற்றி Additional Secretary போடும் உத்தரவுகளின்மீது Secretaryயின் மேல் உத்தரவு பெறவேண்டியதில்லை.

Secretaryயும் Additional Secretaryயும் சம்பள வீதத்தில் ஒரே நிலையினராயினும், இருவருக்கும் சிறிது வேறுபாடு இராமல் இல்லை. Secretary சிறிது உயர்ந்தவரே. சம்பளப்படி நிலையில், அவர் சற்று மேல் படியில் இருப்பதுடன் அத் துறையின் அலுவலக ஆட்சி, அவரிடமே இருப்பதால் அத் துறைப் பணியாளர்கள் அவரிடம் Additional Secretaryயிடம் இருப்பதைக் காட்டிலும் அச்சத்தோடு இருப்பர். ஒரு வண்டியில் பூட்டும் இரண்டு எருதுகளை ஒரே உயரமுடையனவாயும், அவற்றின் கொம்பிலும், நிறத்திலும் பருமனிலும் ஒரே வகையினவாயும் தேர்ந்து பூட்டுவராயினும், இடப்பக்கத்து எருதுக்கும் வலப்பக்கத்து எருதுக்கும் சிறிது வேறுபாடு இருப்பதுபோல Additional Secretaryக்கும் Secretaryக்கும் சிறிது வேறுபாடு இருக்கின்றது என்பது வெள்ளிடைமலை.

எனினும் ஒரு வண்டியில் கட்டும் இரு மாடுகளைப் போல இருவரும் இணையானவர்களே. அம் மாடுகளை ஜதை மாடு, ஜோடி மாடு என்னும் வழக்கையறிவோம். இன்னமும் நாட்டுப்புறங்களில் ஒருஜதை மாடு, இருஜோடி மாடு என்பவற்றை முறையே ஓரிணைமாடு, ஈரிணைமாடு என்றே சொல்லுகின்றனர். தென்னுர்க்காடு மாவட்டத்தில் சிதம்பரத்திலும், தஞ்சை மாவட்டத்தில் கும்பகோணத்திலும் இப்படிச் சொல்லும் வழக்கம் இருப்பதை நான் அந்நகரங்களில் நகராட்சி ஆணையனுக அலுவலாற்றியபோது மாடு வைத்திருப்பவர்கள் சொல்லக் கேட்டிருக்கிறேன். நகரவாசிகளும் படித்தவர்கள் எனப் பெறு

பவர்களும் 'இணை' என்னும் இச் சொல்லை அறியாதவர்களாகி இன்னமும் 'ஜதை' 'ஜோடி' என்றே சொல்லி வருகின்றனர்.

Secretaryயும் Additional Secretaryயும் அலுவலில் இணையானவர்களாயினும் Secretaryயைச் செயலர் என்றும் Additional Secretaryயை இணைச் செயலர் என்றும் கூறுகிறோம். Secretary தனியாக அவர் ஒருவரே, அத் துறைக்கு மேலவராக இருக்கும் போது அவரைச் செயலர் என்றுதானே சொல்வோம். அவருக்கு இணையாக அத் துறைக்கு இன்னொரு செயலரை அமர்த்தும்போது அவரையும் அத் துறைக்குச் செயலர் என்றே குறித்தால் குழப்பம் ஏற்படும். எனவே இருவரில் பணியில் மூத்தவரைச் 'செயலர்' Secretary என்றும் அடுத்தவரை 'இணைச் செயலர்' Additional Secretary என்றும் குறிப்பது மரபு ஆயிற்று.

Joint :

Secretaryக்குக் கீழ் அடுத்து உள்ள Secretary, Joint Secretary எனப் பெறுவார். இவர் Secretaryக்கு இணையானவர் அல்லர். இவரது சம்பளப் படிநிலையும் சிறிது குறைவானதே. இவரைச் செயலருடன் பிணைத்து அத்துறையின் பணிகளைக் கவனிக்கச் செய்கின்றது அரசு. 'பிணைத்தல்' என்னும் சொல், ஒரே நிலையிலுள்ளவர்களை ஒன்று சேர்ப்பதைக் குறிக்கும் சொல் அன்று.

வேளாண் தொழிலில் 'பிணையடித்தல்' என்னும் ஒரு சொல் வழங்குகிறது. நெல் பற்றிக் கொண்டுள்ள தாள் கற்றைகளைக் களத்தில் அடித்து நெல்லைப் பெரும்பாலும் உதிரச் செய்த பிறகு அவற்றை ஓர் இடத்தில் பரப்பி அவற்றின்மீது பிணையடிப்பர். 'பிணை' என்பது ஒரே இணையான மாடுகளைக் கட்டி ஓட்டுவது அன்று. உயரத்திலும் பிறவகையிலும் வேறுபாடுடைய மாடுகளை ஒன்றாகப் பிணைத்து அத் தாள் பரப்பின் மிதித்து அதன்மீது சுற்றிவரச் செய்வர். அடித்தபோது உதிராமல் தாளிலேயே பற்றிக்கொண்டிருந்த சில நெல்லை உதிர வைப்பதற்கே பிணை யோட்டுவது. பிணையில் காளை மாடுகளுடன் சில ஊர்களில் கிடேரிகளையும், எருமைக் கன்றுகளையும் கூடப் பிணைத்துக் கட்டுவதுண்டு.

செயலருடன் ஒத்த நிலையிலுள்ள ஒருவரை அவருடன் சேர்த்துப் பணி புரிய வைக்கும்போது, அங்ஙனம் சேர்க்கப் பெற்றவர் இணைக்கப்பெறுகிறார் என்போம். ஒத்த நிலையில் இல்லாதவரைச் சேர்க்கும்போது அவர் பிணைக்கப் பெறுகிறார் என்போம்.

Additional--இணை; Joint—பிணை.

---

# திரவிட மொழிகளில் அகரமுதலிப்பணி

[பன்மொழிப் புலவர் இரா. மதிவாணன்.]

அகராதி, நிகண்டு, உரியியல், உரிச்சொற்பனுவல், சொற்பொருள்துறைநூல் ஆகியவை அகர முதலியைக் குறிப்பனவாகும். சீனப் பேரறிஞர் கன்பூசியசு என்பவர் மொழி வளர்ச்சி குறித்துக் கூறும்போது, "சொற்கள் தெளிவாகப் பொருள் உணரப்படவேண்டும். சொற்றிரிபால் பொருட்டிரிபு ஏற்படும். சொற்பொருளை நன்குணராதபோது செய்யப்படவேண்டுவதும் நன்கு செய்யப்படாமற்போகும்" என்கிறார். ஆதலால் சொற்களின் பல்வகைப் பொருளாழத்தையும் தெளிவாக உணர்த்தும் அகரமுதலிகள் ஒவ்வொரு மொழிக்கும் இன்றியமையாதனவாய் அவ்வம் மொழியின் இலக்கணத்தின் ஒரு கூருகவே விளங்குகின்றன எனலாம். அந்தந்த மாநில மொழியே ஆட்சிமொழியாக அரியணை ஏறிய நிலையில் மொழி வளம் விளக்கும் ஆட்சிமொழி, சட்டத்துறை, அறிவியல் கலைச் சொல் ஆகிய பல்வகை அகரமுதலித் தொகுப்புகள் அனைத்து மொழிகளிலும் வெளியிடப்பட்டு வருகின்றன.

தமிழில் அகரமுதலி வளர்ச்சியைக் குறித்துப் புலவர் சுந்தர சண்முகனார் 'தமிழ் அகராதிக்கலை' என்னும் விளக்கம் மிக்க நூலை வெளியிட்டுள்ளார். அதில் சிதம்பர இரேவண சித்தர் கி. பி. 1594இல் இயற்றிய 'அகராதி நிகண்டு' உலக முதல் அகராதி என்றும் கி. பி. 1672இல் வெளிவந்த இத்தாலிய மொழி அகராதி உலகில் இரண்டாவது அகராதி என்றும் தமிழுக்குக் கிடைத்துள்ள உலக முதன்மையைச் சிறப்பித்திருக்கிறார். ஆயின் தமிழின் இனமொழிகளான தெலுங்கு கன்னடம் மலையாளம் ஆகிய மூன்று திரவிட மொழிகளிலும் அகரமுதலிப் பணி எவ்வாறு வளர்ச்சிபெற்று வந்துள்ளது என்று சுருக்கமாக அறிவது ஒப்பாய்வு செய்ய விரும்புபவர்க்கும் மொழிவளர்ச்சியில் கருத்தூன்றும் அனைவர்க்கும் பயன்படுவதாகும்.

**தெலுங்கில் அகரமுதலிப்பணி:**

தெலுங்கில் செய்யுள் வடிவில் அமைந்த நிகண்டுகளே முதலில் தோன்றின. 17 ஆம் நூற்றாண்டில் வெளிவந்த, சௌடப்ப கவி இயற்றிய சௌடப்ப சீசாலு, கணபவரபு வெங்

கடேசகவி இயற்றிய ஸ்ரீ வெங்கடேசாந்தரமு, அகாராதி தேசி யாந்தர நிகண்டுவு ஆகியவை முதன்முதல் தோன்றியவை. ஆந்திர நாம சங்கரகமு, ஆந்திர ரத்னகாரமு, நாநார்த்த நிகண்டு, ஆந்திர நாம சேசமு, சாம்ப நிகண்டுவு, ஆந்திர பாஷார்ணவமு ஆகியவை 18 ஆம் நூற்றாண்டின. நுதுடிபாடி வேங்கடகவி இயற்றிய ஆந்திர பாஷார்ணவமு 'ஆந்திர அமர கோசம்' என்று சிறப்பாகப் பாராட்டப்படுகிறது.

19ஆம் நூற்றாண்டில்தான் அகர வரிசைப்பட்ட 'ஆந்திர தீபிக' என்னும் அகரமுதலி வெளிவந்தது. 'ஜெண்டூ நிகண்டுவு' என்னும் பெயரில் போர்ச்சுகீசியர் போர்ச்சுகீசிய தெலுங்கு அகரமுதலி வெளியிட்டனர். ஆயின் அது வழக் கிழந்தது. ஆங்கிலேயரின் முயற்சியால் பல அகரமுதலிகள் வெளிவந்தன. வில்லியம் பிரௌன் கி. பி. 1818 லும் A. D. காம்பெல் கி. பி. 1821 லும் மோரிஸ் கி. பி. 1835 லும், C. P. பிரௌன் கி. பி. 1852 லும் தெலுங்கு ஆங்கில அகரமுதலிகளை வெளியிட்டனர்.

இவற்றுள் C. P. பிரௌன் வெளியிட்ட தெலுங்கு ஆங்கில அகரமுதலியே பிறமொழியாளர்க்கும் பயன்படும் வகையில் சிறந்ததாகக் கருதப்படுகிறது. கி. பி. 1891 ல் சங்கர நாரா யணன் என்பவர் ஒரு தெலுங்கு ஆங்கில அகரமுதலியை வெளி யிட்டார். இந் நூற்றாண்டில் சின்னய சூரி நிகண்டுவு, சப்த ரத்னகாரமு ஆகிய தெலுங்கு - தெலுங்கு அகரமுதலிகளும் வெளிவந்தன.

தெலுங்கு அகரமுதலிகளில் இரண்டு தனித் தெலுங்கு அகரமுதலிகள் தொகுக்கப்பட்டிருப்பது குறிப்பிடத்தக்க சிறப் பாகும். தனித்தெலுங்கு ஆர்வம் மிக்க அச்சதெலுகு ஆர் வலர்கள் வடமொழி மிகுதியும் விரவாத தெலுங்கை விரும்பினர். இதன் விளைவாக கி. பி. 1887 ல் ஒரிகால ஜகந்நாத கவி என்பவர் 'ஆந்திரபத பாரிஜாதமு' என்னும் பெயரிலும், கி. பி. 1907 ல் கொட்ரலட்சுமி நாராயணசாத்திரிகாரு என்பவர் 'லட்சுமி நாரா யணீயமு' என்னும் பெயரிலும் தனித்தெலுங்கு அகரமுதலிகளை வெளியிட்டனர். இவையிரண்டும் 'சுத்த ஆந்திரநிகண்டுவு அல்லது அச்ச தெலுகு நிகண்டுவு' என்று தெலுங்கரால் பாராட் டப்படுகின்றன. இந் நூல்கள் மீண்டும் மறுபதிப்பாக வெளி வந்தில. தனித் தெலுங்கு ஆர்வலர் வரவரக் குறைந்துபோய் விட்டனரோ என ஐயுறத் தோன்றுகிறது.

இருபதாம் நூற்றாண்டில், சப்தார்த்த சிந்தாமணி, சப்தார்த்த சந்திரிக, ஆந்திர வாசஸ்பத்தியமு, வாவில்ல

நிகண்டு, சப்த கௌமுதி, சப்தார்த்த தீபிக, தெலுகு ஜாதீய முலு ஆகியவை வெளிவந்துள்ளன. இவையனைத்தையும்விட கி. பி. 1936 ல் ஏழு மடலங்களாக வெளிவந்த 'சூரியராயாந்திர நிகண்டுவு' என்பதே தெலுங்கிலுள்ள மிகச் சிறந்த அகர முதலியாகும். ஆந்திர நாட்டு பித்தாபுரம் சிற்றரசர், புலமை மிக்க தெலுங்கு வடமொழிப் புலவர் பல்லோரைத் தம் அரண் மனையிலிருத்தி வேண்டுவன வேண்டியாங்கு நல்கி ஏழுமடலம் கொண்ட இந்தப் பேரகர முதலியை ஏறத்தாழ 35 ஆண்டுகளில் தொகுப்பித்தார் என்றும் இதனால் அவர் தம் அரண்மனைச் செல்வம் அனைத்தும் இழந்து வறுமையுற்றார் என்றும் தெலுங்கு மக்கள் அவர் மொழிப்பற்றை விதந்து நன்றி செலுத்து கின்றனர்.

ஆந்திர சாகித்திய அகாதமியினர் அண்மைக் காலத்தில் அகரமுதலி தொகுப்பில் அரிய பணியாற்றி வருகின்றனர். பதபந்த பாரிஜாதமு, ஆந்திர கிரியாஸ்வரூப மணிதீபிக வட்டார வழக்குச் சொற்றொகுப்பு, நாட்டுப்புறத் தொழிற்சொல் அகரமுதலி ஆகியவற்றை வெளியிட்டுள்ளனர். வட்டார வழக்குகளை மாவட்ட வாரியாகத் தொகுப்பித்து கரிம்நகர், கடப்பை, விசாகப்பட்டினம், குண்டூர் ஆகிய நான்கு மாவட்டங் களுக்குரிய நூல்களை வெளியிட்டுள்ளனர்.

'மாண்டலிக விருத்திபத கோசமு' என்னும் நாட்டுப்புறத் தொழிற்சொல் அகரமுதலி (A Telugu Dialect Dictionary of Occupational Vocabularies) நன்கு தொகுக்கப்பட்டுள்ளது. பேராசிரியர் பர். ப. கிருட்டிணமூர்த்தி அவர்களைப் பதிப்பாசிரிய ராகக் கொண்டு 1957 ல் அமைந்த குழு, ஐவரை மாநிலத்தின் பல பகுதிகளுக்கும் நேரில் களப்பணி (Field work) யின் பொருட்டு அனுப்பி வேளாண்மை குறித்த, நிலவகை, நீர்ப் பாய்ச்சல், தவசவகை, பயிர்வகை, எரு, பருவம், ஆனிரை உழவுக் கருவிகள், உழவர் பண்பாடு, விழாக்கள் ஆகியவற்றைக் குறித்த சொல்வழக்குகளைத் தொகுத்துப் படவிளக்கங்களோடு 1962 ல் வெளியிட்டுள்ளனர். வேளாண்மைத் தொழிற்சொல் அகரமுதலி தொகுப்புக்கு அமெரிக்காவிலுள்ள கலிபோர்னியா பல்கலைக்கழகமும் பொருளுதவி செய்துள்ளது.

வேளாண்மைத் தொழிலைப் போன்றே, நெசவு, கட்டிடக் கலை, மீன் பிடித்தலும் படகு அமைப்பும், ஆகிய தொழிற்சொல் அகரமுதலிகள் வெளிவந்துள்ளன. இனி, தச்சுத் தொழில், கொல்லுத் தொழில் ஆகியவற்றைக் குறித்த அகரமுதலிகளும் வெளிவரவிருக்கின்றன. தெலுங்கு மக்களின் இம்முயற்சி

பாராட்டத்தக்கதாகும் பேராசிரியர் திரு தோணப்பா தலைமையில் தெலுங்கு சொற்பிறப்பியல் அகர முதலித் திட்டமும் செயற்பட்டு வருகிறது.

கன்னடத்தில் அகரமுதலிப் பணி:

கன்னட மொழியில் இரன்ன என்னும் புலவர் கி. பி. 996 இல் இயற்றிய 'இரன்ன கந்த' என்னும் நிகண்டே முதல் அகரமுதலியாகக் கருதப்படுகிறது. இந்நூல் கிடைத்திலது. 1145 நாகவர்மர் தொகுத்த அபிதான வஸ்து கோச நாசிராசரின் நாசிராஜியம் ஆகியவை வடமொழியிலுள்ள அமர கோசத்தைப் பின்பற்றி எழுதப்பட்டவை.

தொல்காப்பிய உரியியலை அக்காலத்திய அகரமுதலி என்று நாம் கொள்வதுபோலக் கன்னடியரும் பழங்கன்னட இலக்கண நூலான சப்தமணி தருப்பணத்தில் உள்ள உரியியல் பகுதியை முதல் அகர முதலியாகப் போற்றுகின்றனர். கேசி ராஜன் என்பவர் 1260 இல் இந்நூலை இயற்றினர். இதில் ழகரத்தைக் கொண்ட 181 உரிச் சொற்களையும் 985 வேர்ச் சொற்களையும் 233 அருஞ்சொற்களையும் விளக்குகிறார்.

13ஆம் நூற்றாண்டிலிருந்து 19ஆம் நூற்றுண்டு வரை மங்காபிதானம் என்னும் வடசொல்-கன்னட நிகண்டு, சதுராசிய நிகண்டு, கப்பிகர் கைப்பிடி, கருநாடக சப்தமஞ்சரி, கர்நாடக சஞ்சீவன, பாரத நிகண்டு, சப்தாகம, நாநார்த்த ரத்னகர, கவிகன்தஆரம், அமரகோச கன்னட விருத்தி ஆகிய நூல்கள் வெளிவந்தன.

கன்னட மொழிக்குப் பெருமை தருவதாக அமைந்த ஒரே அகரமுதலி 1894இல் வெளியிடப்பட்ட கிட்டலின் கன்னட ஆங்கில அகர முதலியாகும். இதனைச் சென்னைப் பல்கலைக் கழகம் திருத்திய முறையில் மறுபதிப்பு வெளியிட்டு நடுவணரசின் பாராட்டிதழைப் பெற்றுள்ளது. மைசூர்ப் பல்கலைக் கழகம் கன்னட ஆங்கில அகரமுதலியை வெளியிட்டுள்ளது. அண்மையில் பெங்களூர் கன்னட சாகித்திய பரிசத்தினர் கன்னட-கன்னடப் பேரகர முதலியின் (கன்னட பிருகத் கோச) முதலிரு மடலங்களை வெளியிட்டுள்ளனர். இன்னும் மூன்று மடலங்களை வெளியிடவிருக்கின்றனர். இவர்களே கருநாடக அரசின் 50% பொருளுதவி பெற்று 1000 பக்கங்கள் கொண்ட சுருக்கக் கன்னட அகர முதலியொன்றை அடக்க விலையான 12 ரூபாயிலும் குறைத்து ஐந்தே ரூபாய் மலிவு விலையில் வெளியிட்

டுள்ளனர். முதற் பதிப்பில் வெளிவந்த 50,000 படிகளும் விரைவில் விற்றுப் போய்விட்டதால் இரண்டாம் பதிப்பாக மேலும் ஓரிலக்கம் படிகளை அச்சிட்டு வருகின்றனர்.

**மலையாளத்தில் அகரமுதலிப் பணி :**

மலையாளத்தில் கி. பி. 1846இல் பெய்லி பாதிரியார் (Rev. B. Bailey) வெளியிட்ட மலையாள ஆங்கில அகரமுதலியே முதல் நூலாகக் கருதப்படுகிறது. இவரையடுத்து காலின்சு 1865லும் குண்டர்ட் பாதிரியார் 1872லும் மலையாள ஆங்கில அகர முதலிகளை வெளியிட்டனர். அண்மைக் காலம் வரை குண்டர்ட்பாதிரியாரின் அகர முதலியே மிகச் சிறந்ததாகக் கருதப்பட்டு வந்தது.

1923இல் வெளிவந்த ஸ்ரீகண்டேசுவர பத்ம பிள்ளையின் சப்த தாராவளியும் 1939லும் 1943லும் இரண்டு மடலங்களாக வெளிவந்த நாராயண பணிக்கரின் நவயுக பாஷ நிகண்டும் மலையாளத்திலுள்ள சிறந்த நிகண்டுகள் என்ருலும் இவற்றுள் வடமொழி நிகண்டுகளிலிருந்து மலையாளத்தில் என்றும் வழங் காத அளவிறந்த வடசொற்கள் திணிக்கப்பட்டுள்ளனவே ஒழிய உலக வழக்கு மலையாளச் சொற்கள் சேர்க்கப்படவில்லை[1] என்று கூறப்படுகிறது.

மலையாளத்தில் ஒரு நல்ல அகரமுதலி இல்லாத குறையை நீக்க, கேரள அரசும் கேரளப் பல்கலைக் கழகமும் இணைந்து 1957இல் பேராசிரியர். திரு. சூரநாடுகுஞ்சன் பிள்ளை தலை மையில் 36 பேர் அடங்கிய ஒரு குழுவை அமர்த்தினர். இக் குழுவினர் 1965இல் மலையாளப் பேரகரமுதலியின் முதன் மட லத்தையும் 1970இல் இரண்டாம் மடலத்தையும் வெளியிட்டுள் ளனர். அகரம் ஒரே எழுத்தில் தொடங்கும் சொற்களுக்கு மட்டும் 1000 பக்கங்கள் கொண்ட முதன் மடலமும் ஏனை உயி ரெழுத்துகளுக்கு 1400 பக்கங்கள் கொண்ட இரண்டாம் மடல

---

1. 'As a result many Sanskrit words which are not in use in Malayalam works have been included, while many others frequently used are left out. Numerous words current in the spoken language among the various sections of the people and in the different parts of Kerala, have likewise escaped the attention of the lexicographers'.

Surnad Kunjan Pillai—Malayalam lexicon-Vol I
Introduction - Page-12

மும் சேர்ந்து ரூ. 80 விலையாகின்றன. மேலும் ஐந்து மடலங்கள் (Volumes) வெளிவரவிருக்கின்றன.

இந்த மலையாள—மலையாள—ஆங்கிலப் பேரகர முதலி இந்திய மொழிகளில் வெளிவந்துள்ள அகரமுதலிகளிலேயே சிறந்ததாகக் கருதப்படுகிறது. இந்த அகரமுதலி வெளியீட்டுக்கு அனைத்திந்தியப் பல்கலைக் கழக நல்கைக் குழு (U. G. C.) 50 விழுக்காடு பொருளுதவி செய்து வருகிறது.

இவ்வகர முதலிக் குழுவினர் உலக வழக்கு மலையாளச் சொற்களைப் பலவிடங்கட்கு நேரிற் சென்று தொகுத்துள்ளனர். செய்தித்தாள் வாயிலாக வேண்டுகோள் விடுத்தும் மலையாள அன்பர்களின் வழியும் திரட்டியிருக்கின்றனர். கேரளத்தின் பல்வேறு பகுதிகளிலிருந்தும் இலக்கத்தீவிலிருந்தும் 300க்கும் மேற்பட்ட மலையாள அன்பர்கள் சொற்களையும் வழக்காறுகளையும் திரட்டியனுப்பியுள்ளனர். அவர்களின் பெயர்ப் பட்டியல் அகரமுதலியில் இடம் பெற்றுள்ளது. இந்த அகர முதலி, வரலாறு, ஒப்பியல், சொற்பிறப்பியல் ஆகியவற்றைக் களனகக் கொண்டு தொகுக்கப்பட்டதாயினும் வடசொற்களை மிகுதியாகவே கொண்டுள்ளது.

மேனாட்டுப் பேராசிரியர்களான பரோ எமனோவர் திரவிட மொழிகளின் ஆய்வில் கருத்தூன்றிப் பல்கால் இங்கு வந்து நேரடி ஆய்வு செய்தும், பல்லாண்டுகள் அரிதில் முயன்றும், இந்தியாவில் வழங்கும் திருந்திய திருந்தாத திரவிட மொழிகள் அனைத்திலும் சொற்களைத் தொகுத்து ஏறத்தாழ 5000 சொற்களையும் அவற்றின் இனச் சொற்களையும் அகரவரிசைப்படுத்தி, திரவிடச் சொற்பிறப்பியல் அகரமுதலியை (Dravidian Etymological Dictionary) 1961லும் அதன் பின்னிணைப்பு நூலை 1968லும் வெளியிட்டுள்ளனர்.

தெலுங்கரின் நாட்டுப்புறத் தொழிற்சொல் அகரமுதலியும், கன்னடியரின் மலிவுப் பதிப்பு வெளியீடும், கேரளத்தவரின் விரிவான அகரமுதலி அமைப்பும், தமிழரின் தாய்மொழித் தூய்மை காத்தலும் பேராசிரியர்கள் பரோ எமனோவரின் அயரா உழைப்பும் அகரமுதலி தொகுப்பாளர் அனைவர்க்கும் புத்துணர்வு ஊட்டும் செய்திகளாகும் எனலாம்.

———

## ‘ஜப்பானில் நான் கண்டதும் கேட்டதும்’
## நூல் வெளியீட்டு விழா (3-11-1975)



சென்னை இராசேசுவரி திருமண மண்டபத்தில், பேராசிரியர் எஸ். என். சொக்கலிங்கம் அவர்கள் எழுதிய இந்நூலை வெளியிட்டு மாண்புமிகு டாக்டர் கலைஞர் அவர்கள் பாராட்டிப் பேசுதல்.

—சிலம்பு ௫ ப ரல் ௧ பக்கம் ௯௪



ராஷ்ட்ரபதி நிலையம்முன் சென்னைப் பல்கலைக் கழக ஆங்கிலப் பேராசிரியர் டாக்டர் அப்பாசாமி, தமிழ்ப் பேராசிரியர் டாக்டர் ந. சஞ்சீவி. முன்னாள் மொழிபெயர்ப்பு இயக்குநர் கு. இராசவேலு, முன்னாள் பதிவாளர் பெ. திருஞானசம்பந்தம்

பக்கம்-௨௨௫

## பள்ளி மாணவர் பல்வகை நூல்கள்
## பேழை அறிமுகவிழா (3-12-1975)



பேழையினை அறிமுகப்படுத்திய
மாண்புமிகு டாக்டர் நாவலர், குழந்தைக் கவிஞர் அழ வள்ளியப்பா,
புலவர் தணிகை உலகநாதன் ஆகியோருடன் கழக ஆட்சியாளர்.

**கழக ஆட்சியாளர் வ. சுப்பையா பிள்ளையைச்**
**சென்னை, பாரதி இளைஞர் சங்கம்**
**6-12-75 இல் பாராட்டியது.**



நடுவர் திரு. என். கிருட்டிணசாமி ரெட்டியார், கோ. பூவராகன், எஸ். வி. எஸ்., சீகாழி கோவிந்தராசன், அவ்வை நடராசன், கே. இராமமூர்த்தி, பாராட்டுப் பெற்ற திரு. வ. சுப்பையா பிள்ளை.

## பள்ளி மாணவர் பல்வகை நூல்கள் பேழை அறிமுக விழா

கழகம் உருவாக்கியுள்ள 'பள்ளி மாணவர் பல்வகை நூல்கள்' அடங்கிய பேழை அறிமுக விழா 8—12—75 இல் சென்னை இலிங்கிச் செட்டித்தெரு வள்ளலார் திருவருள் மண்டபத்தில், தமிழகக் கல்வி அமைச்சர் மாண்புமிகு டாக்டர் நாவலர் இரா. நெடுஞ்செழியன் அவர்கள் தலைமையில் சீருஞ் சிறப்புமாக நடைபெற்றது.

கழக ஆட்சியாளர் தாமரைச் செல்வர் வ. சுப்பையா பிள்ளை அனைவரையும் வரவேற்று நிகழ்த்திய உரை :

"இந்தப் பள்ளி மாணவர் பல்வகை நூற்பேழை உருவாவதற்கு நம்முடைய மதிப்பிற்குரிய தலைவர் டாக்டர் நாவலர் அவர்களின் 55 ஆவது பிறந்தநாள் விழா தான் வழிகாட்டியது என்பதை உங்களுக்கு மகிழ்ச்சியோடு தெரிவித்துக் கொள்ளுகிறேன். அந்தப் பிறந்தநாள் விழா 27—7—74 இல் கலைவாணர் அரங்கத்தில் நடைபெற்றது. சென்னை நகரிலுள்ள கல்வி அதிகாரிகள் இருவரும் என்னிடம் வந்து 55 பேழைகளை உருவாக்கித் தரவேண்டும் என்று 12 நாட்களுக்கு முன் தெரிவித்தார்கள். அதன்படி விழாவன்று காலையிலேயே 55 பேழைகளும் அரங்கத்தில் சேர்ப்பிக்கப் பெற்றன. பேழைகள் அழகாக இருந்தன. ஆனால் முதுகில் நூற்பெயர்களின்மையால் அவற்றுள் என்ன நூல்கள் இருந்தன என்பதை யாரும் அறியக்கூடவில்லை.

கழகம் இயல்பாகவே சில நூல்களைத் தொகுப்பாக வெளியிட்டுள்ளது. எடுத்துக்காட்டாக சேக்ஸ்பியர் கதைகள், காப்பியக் கதைகள், ஈசாப் கதைகள், நீதி நூல்கள் என்று தொகுப்புத் தொகுப்பாகப் பல்வகை நூல்களை வெளியிட்டுள்ளது. அவற்றை நோக்கிய போது ஏன் இப்படிக் கழக நூல்களைத் தொகுப்பாகவே அமைக்கக் கூடாது என்று எனக்குத் தோன்றியது. ஆனால், அதனை உருப்படுத்த ஏறத்தாழ ஓராண்டும் நான்கு திங்களும் ஆயிற்று. சிற்சில தலைப்புகளில் அவற்றிற்குத் தகுதியுடைய அறிஞர்களை எழுதச் சொல்லி அந்த முறையிலேதான் இதிலே வைக்கப்பெற்றுள்ளன. பொருளாதார நூல்கள் பத்து ஒரு பெட்டியிலே அடங்கியுள்ளன. அப்படியே பாண்டிநாட்டுப் புலவர்கள்-குமரிநாட்டுப் புலவர்கள்-தமிழ்நாட்டுப் பெண்மணிகள், தமிழ்நாட்டுக் கவிஞர்கள், தமிழ்நாட்டு மேதைகள் என்று இப்படியெல்லாம் நூல்களை உருவாக்கி இந்தப் பேழையிற் காணப்படும் பெட்டிகள் அமைக்கப் பெற்றன.

இந்தப் பேழையை அறிமுகம் செய்வதற்கு மாண்புமிகு கல்வி அமைச்சர் அவர்கள் இசைவு தந்தது நமக்கெல்லாம் பெரும் பேறாகும். இதற்குமுன் இரண்டு பேழைகளை வெளியிட்டுள்ளோம். 1970 ஆம் ஆண்டு பிப்ரவரித் திங்களில் கோகலே மண்டபத்தில் பழந்தமிழ் இலக்கண இலக்கியங்களைக் கொண்ட பேழை ஒன்றை வெளியிட்டோம். அப்போது மாண்புமிகு அமைச்சர் பேராசிரியர் அன்பழகன் அவர்கள் தலைமையில் பள்ளிக்கல்வி இயக்குநராக விருந்த உயர்திரு சை. வே. சிட்டிபாபு அவர்கள் அதனை அறிமுகஞ் செய்துவைத்தார்கள். நம்முடைய கல்வி அமைச்சர் அவர்கள் 'தமிழ்ப் பேரொளி' என்னும் பேரறிஞர் அண்ணா அவர்களைப் பற்றிய அரிய நூலை வெளியிட்டார்கள்.

இந்த ஆண்டு பிப்ரவரித் திங்களில் தமிழர் சமய இலக்கியப் பேழை யினை உயர்நீதிமன்ற நடுவர் உயர்திரு கிருட்டிணசாமி ரெட்டியார் அவர்கள் தலைமையில் குன்றக்குடியடிகளார் இதே மண்டபத்தில் அறி முகஞ் செய்து வைத்தனர்.

இப்படிப் பேழைகளாக நூல்களை வெளியிடுவதற்குக் கழகம் கிட்டத்தட்ட 55 ஆண்டுகளாக நூல் வெளியிடும் முயற்சியில் ஈடுபட் டிருந்ததே காரணம் என்பதும், அதனால்தான் முடிந்தது என்பதும் நான் சொல்லாமலேயே நீங்கள் அறிவீர்கள். அல்லாமலும் இக் கழகத்தைப் பற்றியும் ஒரு சிறிது நான் சொல்ல விரும்புகிறேன்.

இந்தக் கழகம் 21—9—1920 இல் தோற்றுவிக்கப் பெற்றது. அந்தக் காலம் தமிழைப் பற்றியோ, சைவத்தைப் பற்றியோ, வைண வத்தைப் பற்றியோ, கலைகளைப் பற்றியோ சரியாக எண்ணாத காலம். அந்தக் காலத்தில் என் தமையனார் திருவரங்கனார் அவர்கள் இதனைத் தோற்றுவித்தார்கள். இஃது ஒரு கூட்டுப்பங்கு நிறுவனம் (Public Limited Company) ஆகும். இதற்குக் கழகம் என்ற பெயர் அமைந் ததுபற்றி என்னுடைய பவள விழாவிலே மாண்புமிகு டாக்டர் கலைஞர் அவர்கள் மிகவும் பெருமைப்படுத்திப் பேசினார்கள். இந்தக் கழகம் தோன்றிய பின்னர்தான் பல கழகங்கள் தோன்றின.

இக்கழகம் தமிழ்நாடு-தமிழ்இனம்-தமிழ்மொழி என்ற குறிக் கோளிலிருந்து அன்றுமுதல் இன்றுவரை ஒரு சிறிதும் பிறழாமல் பணி யாற்றி வருகிறது என்பதை நீங்கள் நன்கு அறியலாம். இந்த அரசு அமைவதற்குக் கழகம் ஒருவாயிலாக அமைந்தது என்று டாக்டர் கலைஞர் அவர்களே சொன்னார்கள். ஏனெனில் மறைமலையடிகள் தனித்தமிழ் இயக்கத்தைத் தோற்றுவித்த காலத்திலேயே இந்தக் கழகம் அதற்கு விளம்பரத்துறைபோல் அமைந்தது.

மக்களுடைய பெயர்கள், இல்லங்களின் பெயர்கள் எல்லாமே தமிழில் இருக்கவேண்டும் என்பதற்காகவும், வழிபாடுகள் தமிழில் இருக்கவேண்டும் என்பதற்காகவும் நூல்கள் பலவற்றைக் கழகம் வெளி யிட்டுள்ளது. தமிழில் ஆட்சி நடைபெறும்பொருட்டு 'ஆட்சித்துறைத் தமிழ்', 'பிழை நீக்கி எழுதுமுறை', ஆங்கிலத் தமிழ்க் கையகராதி ஆகியன உருவாக்கப் பெற்றுள்ளன. தமிழ் பயிற்று மொழியாதல் வேண்டுமென்று சில நூல்களை வெளியிட்டோம். இவையெல்லாம் கழகத் திங்கள் வெளியீடு 'செந்தமிழ்ச் செல்வி' வாயிலாக வெளி வந்துள்ளன.

ஒரு பதிப்பகம் கூட்டுப் பங்கு நிறுவனமாக இருப்பது அரிது. பதிப் பகமாக மட்டும் இருக்கலாம்; ஆனால் ஓர் அச்சகத்தைக் கொண்டதாகவும், கட்டடப் பகுதியைக் கொண்டதாகவும் இருப்பது அருமை. இவ்விரண் டும் இருக்கலாம்; ஆனால் ஒரு பதிப்பகம் ஒரு திங்களிதழைக் குறிக்கோ ளோடு நடத்துவது என்பது அருமை. மேலும் ஒரு பதிப்பகம் நூல்நிலை யங்களை அமைத்து நடத்துவது என்பது இந்தக் கழகத்தைத்தவிர உலகத் திலேயே வேறெங்கும் இல்லை. இது நான் சொல்வதில்லை. வெளிநாடு களிலிருந்து வருகிறவர்கள் சொல்லுகிறார்கள். இங்கே ஒரு மொழியிலே பல துறை நூல்கள் இருப்பது கண்டு அவர்கள் வியக்கிறார்கள். எந்தத் துறையில் ஆராய வேண்டுமானாலும் இந்த நூல் நிலையம் பயன்படுகிறது

என்பது நீங்கள் எல்லாம் அறிந்து மகிழ்தற்குரியது. இது தமிழ் நாட்டிற்கே பெருமை. இந்த நூலகம் மட்டுமன்றி மறைமலையடிகள் வாழ்ந்த மாளிகையும் காட்சிக் கூடமாக (மியூசியமாக) அமைக்கப்பட்டுள்ளது. கவிஞர் பாரதியார், புரட்சிக்கவிஞர் பாரதிதாசன் ஆகியோருக்குக் கூட இப்படிப்பட்ட கலைமன்றங்கள் இன்னும் உருவாகவில்லை.

மறைமலையடிகளார் இராமலிங்க அடிகளுடைய கொள்கையைப் பரப்பவே 'பொது நிலைக்கழகம்' அமைத்தார்கள். இராமலிங்க அடிகள் முதன்முதல் பேசிய இல்லத்தில் மறைமலையடிகள் நூல் நிலையம் அமைந்ததை எண்ணி நாம் மகிழவேண்டும்.

இதுகாறும் கழகம் 1596 நூல்களை வெளியிட்டிருக்கிறது. எந்தப் பதிப்பகமும் இதுகாறும் இத்தனை நூல்களை வெளியிட்டதில்லை. இது நான் சொல்வதன்று; அண்மையில் உதகையிலே நடைபெற்ற பதிப்பாளர்கள் கூட்டத்திற்கு வெளிமாநிலங்களிலிருந்து வந்திருந்தவர்கள் இதுபற்றி வியந்து கூறினார்கள் என்று அங்குச் சென்றிருந்த என் மூத்த மருகர் கழகப் பொதுமேலாளர் சொன்னார்.

நம் மதிப்பிற்குரிய கல்வி அமைச்சர் அவர்கள் இதுகாறும் கலந்து கொண்ட கழக விழாக்களிலே இது பன்னிரண்டாவது விழாவாகும். இவ் விழாக்களில் அவர்கள் கழகம் பதிப்புத்துறையில் ஆற்றிவரும் பணிகளைப் பற்றிக் கூறியுள்ள கருத்துக்களையெல்லாம் தொகுத்துச் சிறு நூலாக வெளியிட்டிருக்கிறேன். இந்தக் கழகம் செய்த பணிகளைத் துருவித் துருவிச் சென்று அறிந்தவர்கள் அவர்கள் என்பதை அதைப் படிப்பவர்கள் தெரிந்து கொள்ளலாம்.

ஆகவே, அவர்கள் காலத்திலேயே இந்த நூலகமும், பதிப்பகமும் இன்னும் என்னென்ன பணிகள் செய்யவேண்டுமோ அவற்றைச் செய்வதற்கு, 'உனக்கு என்னப்பா வேண்டும்?' என்று அவர்கள் கேட்டாலே போதும். அவர்களின் அன்பு வெள்ளத்திற்கு வழியிலிருக்கும் அணைகள், மதகுகள் ஆகிய தடைகளையெல்லாம் நீக்கி, அது நேராக இந்தக் கழகத்திற்கும் நூல் நிலையத்திற்கும் வந்து பாயுமானால் இவை பெருவளர்ச்சி பெறும் என்பதில் ஐயமில்லை. என்னுடைய கருத்துகளெல்லாம் நிறைவேறும்படி வாழ்த்தவேண்டும் என உங்களையெல்லாம் அன்போடு கேட்டுக்கொள்ளுகிறேன். வணக்கம்.

குழந்தை எழுத்தாளர் சங்கத் தலைவர் **குழந்தைக் கவிஞர் அழ. வள்ளியப்பா அவர்கள்** ஆற்றிய உரையின் சுருக்கம்.

"நம் கல்வி அமைச்சர் அவர்கள் தமிழ் அன்னைக்குக் குரல் கொடுப்பவர்கள்' என்று கவிஞர் வேழவேந்தன் அவர்கள் ஒரு கவிதையிலே எழுதியிருக்கிறார்கள். அப்படிப்பட்டவர் நமக்குக் கல்வி அமைச்சராக வாய்த்திருப்பது மிகப் பெரும் பேறுகும். அவர்கள் கல்வித்துறையிலே அமைதியாகப் பல புரட்சிகளைச் செய்து வருபவர். நூலகங்களுக்காக முன்பெல்லாம் இலட்சக்கணக்காக ரூபாய்களைக் கொடுத்து வருவார்கள். ஆனால், இப்பொழுது ஒரு திட்டம் வகுத்து அதில் ஒரு பகுதியைப் புத்தகங்களாகக் கொடுக்கவேண்டும் என்று முடிவு செய்திருக்கின்றார்கள். பள்ளிகளில் கையெழுத்துப் பயிற்சி—உடற்பயிற்சி—நூலகப் படிப்பு—ஒழுக்கம் இந்த நான்கிற்கும் மதிப்பெண்கள் கொடுத்துத் தேர்ச்சி பெறச் செய்ய உதவுகிறார்கள்.

சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் பழைய இலக்கியங்களை மட்டும் வெளியிட்டு வரவில்லை. காலத்திற்கேற்றபடி புத்தம் புதிய கலைகளை யெல்லாம் வெளியிட்டு வருகிறது. இந்தப் புத்தகங்களையெல்லாம் கல்வித் துறையினர் வாங்குவார்கள் என்று எதிர்பார்த்தாலும் இன்னும் பலருக்கும் இதில் பங்கு உண்டு. ஒவ்வொரு பெற்றோரும் ஆளுக்கு ஒரு ரூபா அல்லது அரை ரூபா என்று கொடுத்தால் கூட பள்ளிகளில் இப்படியொரு பேழையை வாங்கி வைத்துவிடலாம்.

டாக்டர் நாவலர் அவர்கள் குறிப்பிட்டிருப்பதுபோல, இந்த நூற்பதிப்புக் கழகம் இல்லாதிருந்திருக்குமேயானல் அரும்பெரும் நூல்களெல்லாம் வெளிவராமல் போயிருக்கும். இதை எண்ணிப் பார்ப்போமானல் இந்த நூற்பதிப்புக் கழகத்தின் இன்றியமையாமையை நாம் அனைவரும் அறிந்து கொள்ளலாம்.''

## புலவர் தணிகை உலகநாதன் அவர்கள் ஆற்றிய உரையின் சுருக்கம்:

''இந்தக் காலத்திலே தமிழை வளர்ப்பதென்ருல் மிக மிக எளிது. கழக நூல்களை வைத்துக்கொண்டால் தெருவெல்லாம் தமிழ் முழக்கம் செய்யக்கூடிய ஆற்றல் தானுக வந்துவிடும். கழகம் எதிர்நீச்சலில் வளர்ந்தது. தமிழுக்குத் தமிழர்களே தடையாக இருந்த காலம் ஒன்று உண்டு. அந்தக் காலத்தில் கழகத்தை வளர்த்தவர் நம் தாமரைச் செல்வர் அவர்கள் என்பதை விளக்க இந்த மணித்துளிகள் போதா. கழகம் பல ஆசிரியர்களை உருவாக்கியிருக்கிறது. இஃது ஓர் இலக்கியப் பட்டறை என்று சொன்னல் அது மிகப் பொருந்தும். கழகம் செய்கின்ற தொண்டு பயனுள்ள நிலையான தொண்டு. இக் கழகம் வாழ்க! வளர்க! என்று வாழ்த்துகிறேன்.''

## பேழை வெளியீடு:

அடுத்துக் 'குழந்தை உலகம்' நடத்தும் திரு. எ. ஜி. சுப்பிரமணியம் அவர்கள் முதல் பேழையை வாங்கினர். நாவலர் அவர்கள் பேழையின் சாவியினை அவரிடம் அளித்தார்.

## மாண்புமிகு கல்வி அமைச்சர் டாக்டர் நாவலர் இரா. நெடுஞ்செழியன் அவர்களின் பாராட்டுரை:

''நம்முடைய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் நல்ல தமிழ்ச் செல்வத்தினுடைய பேழையாகவே இருந்து வருவதை நாம் நன்ருகக் கண்டு வருகிறோம். மற்ற ஆடம்பரங்களுக்கு ஏராளமாகச் செலவு செய்யும் நம்மவர் ஒரு 700 ரூபாய்க்கு ஒரு பேழையை வாங்கி, அது வளருகின்ற குழந்தைகள் அறிவுபெற, அந்த அறிவு மற்றச் செல்வங்களை யெல்லாம் ஈட்டித் தருகின்ற வகையில் அறிவுச் செல்வத்தை வாங்கித்தர வேண்டும் என்கின்ற உணர்வு நம்மவர்களிடத்தில் இல்லை. அந்த உணர்வு ஊட்டப்பெற வேண்டும் என்கின்ற அடிப்படையில்தான் சிறுவர்களுக்குப் பயன்படுகிற 321 நூல்களை இந்தப் பேழையில் அடுக்கித் தந்திருக்கிருர்கள்.

குழந்தைகளை அறிவைத் தேடவைக்க விரும்புவீர்களானல், ஒவ்வொரு வீட்டிலும், இந்த 321 நூல்களைக் கொண்ட பேழை இருந்து தீரவேண்டும். சிறுவர், சிறுமியர்களுக்கு நீங்கள் நன்மை செய்ய

வேண்டுமானால் அவர்களுக்கு வெள்ளிநகை, தங்கநகை, வைரநகை வாங்குவதைவிட ஊராரைக் கூப்பிட்டுச் சாப்பாடு போட்டுப் பணத்தைக் கரைப்பதைவிட, விழாக்களுக்காகப் பணத்தை வீணாக்கு வதைவிட 700 ரூபா செலவழித்து அறிவுச் செல்வத்தை அவர்களுக்கு வாங்கித்தந்தால் அது ஒரு தலைமுறைக்கு மட்டுமன்று, பல தலைமுறை களுக்குப் பயன்படுகின்ற அளவுக்கு அமையும்.

ஆகவே, இப்படிப்பட்ட நூல்கள் வீட்டுக்கு வீடு அமைய வேண்டியது மிகமிக இன்றியமையாததாகும். அந்த முறையிலேதான் மிக அரும்பாடுபட்டு இந்தப் பேழையினை உருவாக்கியவர்களைப் பாராட்ட நான் கடமைப்பட்டிருக்கிறேன்.

ரூ. 894·60 பெறக்கூடிய பேழையினை ரூ 194·60 தள்ளுபடியாக்கி 700 ரூபாய்க்குத் தரும் இந்த முயற்சியை நான் மிகமிகப் பாராட்டுகிறேன். இது உண்மையிலேயே வீடுகள் தோறும்—பள்ளிகள் தோறும்—இருக்க வேண்டிய பேழையாகும். இதனைக் கல்வித்துறை எந்த அளவுக்குப் பயன் படுத்தக்கூடுமோ அந்த அளவுக்குப் பயன்படுத்த தமிழரசு முன்வரும். அதோடு மட்டுமல்லாமல் பள்ளிச் சீரமைப்பு மாநாடு என்று வைக்கும் போது பொதுமக்களும் பள்ளிக்குத் தேவைப்படுவதை வாங்கித்தர வேண்டும் என்ற வேண்டுகோளை விடுத்துப் பல கோடிக்கணக்கான ரூபாய் வாங்கித் தந்திருக்கிறார்கள். பொதுமக்கள் நான்குபேர் சேர்ந்து, இரண்டு பேர்சேர்ந்து, பத்துப் பேர் சேர்ந்து, இப்படிப்பட்ட பேழை களாக வாங்கி அவரவர்கள் விரும்புகிற பள்ளிக்கு, அவரவர்கள் படித்த பள்ளிக்கு, அவரவர்கள் வாழுகின்ற இடத்திலே இருக்கின்ற பள்ளிக்கு அளிப்பார்களானால் அதன் மூலம் எதிர்கால இளைஞர்களின் அறிவுத்திறன் வளர வாய்ப்பு ஏற்படும். அதனைச் செய்ய அனைவரும் முன்வரவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.''

**நன்றியுரை :**

கழக ஆட்சியாளர் அவர்கள் தம் நன்றியுரையில் பின்வருமாறு குறிப்பிட்டார்கள்: 'மாண்புமிகு அமைச்சர் அவர்கள் இந்தப் பேழையை வெளியிட்டதினால் இந்தக் கழகம் மேலும் செய்யவேண்டிய பணி களுக்கு ஊக்கம் தந்துள்ளார்கள். இந்தப் பேழை பள்ளிகளிலெல்லாம் இடம்பெற வேண்டும் என்பதுதான் என்னுடைய குறிக்கோள். செல்வர்கள் வீடுகளிலும் இந்தப் பேழை இடம்பெற வேண்டும். உயர் நிலைப் பள்ளிகளுக்குரிய நூல்களையும் பேழையாக வெளியிடவேண்டும் என்ற எண்ணமும் தமியேனுக்கு இருக்கிறது. இப்போது மருத்துவத் துறையிலே நூல்களை வெளியிட்டுக் கொண்டிருக்கிறோம். வாய் பல் மருத்துவநூலை வெளியிட்டோம். அதற்கு இப்போது இரண்டாவது பரிசு கிடைத்திருக்கிறது. பின்னர்க் கண் மருத்துவ நூல் வெளியிடப் பெற்றது. அது டாக்டர் கலைஞர் அவர்களின் கண்ணொளி வழங்கிவரும் திட்டத்தினை நினைவுகூரும் பொருட்டு அவர்கட்குப் படைப்பாக்கப் பெற்று அவர்களுடைய பாராட்டுதலையும் பெற்றிருக்கிறது. இப்போது 'நரம்பு மருத்துவம்' அச்சிடப்பெற்று வருகின்றது. அது விரைவிலே வெளியிடப்பெறும்.

புதுப்புது நூல்கள் வெளிவரும்போது இப் பேழையிலுள்ள நூல்கள் மாறிக்கொண்டே வரும். நீங்கள் எல்லோரும் வந்து இந்த விழாவினைச் சிறப்பித்தமைக்காக உங்கள் அனைவருக்கும் என்னுடைய பணிவான அன்பைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். வணக்கம்.'

# பள்ளி மாணவர் பல்வகை நூல்கள் பேழையின்

## அருமையினை அறிவித்தல்

[புலவர். பெ. முனியப்பன்]

1. பள்ளிசெல்லும் மாணவரே வருக
 பல்வகைநூல் தமைஒன்றுய்ப் பருக
 பல்கலைநூல் களஞ்சியம்இப் பேழை
 படிப்பவர்கள் ஆவதில்லை ஏழை.

2. பல்துறையில் நல்லறிவை ஈர்க்கப்
 பாங்கமைஇப் பேழைநூல் பார்க்க
 இல்லைஇதற் கிவ்வுலகில் ஈடு
 என்றுமிந்தப் பேழைதன்னை நாடு!

3. நாட்டிலுள்ள அறமெல்லாம் கூட்டும்
 நன்னூல்கள் வழிஉனக்குக் காட்டும்
 பாட்டுண்டு மகிழ்ந்தேநீ பாடு
 பாங்கான நாடகமும் ஆடு.

4. ஏட்டிலுள்ள கதையெல்லாம் கண்டு
 எழுத்தாளன் ஆகிடுவாய் இன்று
 வீட்டில்வாழ் மேதைகளின் வாழ்வு
 விருந்தாகிப் போக்கும்உன் தாழ்வு.

5. பண்டிருந்த புலவர்தம் பாங்கு
 படித்தறிந்து இவ்வுலகில் ஓங்கு
 தொண்டாற்றும் தலைவர்தம் தூய்மை
 துணையாகி உனக்குரைக்கும் வாய்மை.

6. தண்டமிழ்சொல் கட்டுரைகள் கற்பாய்
 தட்டின்றி அவ்வழியில் நிற்பாய்
 நன்றாற்றும் அறிவியலும் உண்டு
 நாம்கற்போம் இப்பேழை கொண்டு.

7. ஒப்பில்லா அறிஞர்தம் உழைப்பு
 ஒவ்வொன்றுய் உனக்குரைக்க அழைப்பு
 செப்பமிகு பாவலர்தம் சீரும்
 சேர்த்திணைத்தே இப்பேழை கூறும்.

8. தப்பில்லாத் தொழிலோடு கணக்கு
 தயவுடனே இதுகொடுக்கும் உனக்கு
 இப்பாரின் வரலாறும் சொல்லும்
 இதற்கெதிராய் எதுநின்று வெல்லும்?

9. அத்தனையும் கற்றுவிடல் ஆகும்
 அறியாமை தானுகப் போகும்
 புத்தமைப்புப் பெட்டிகளின் வண்ணம்
 புதுமைதந்தே உனைக்கவர்தல் திண்ணம்.

10. இத்தனைதான் என்றெண்ணல் தப்பு
 எதனைத்தான் இதற்குரைப்பேன் ஒப்பு?
 முத்தமிழின் மாண்பினரே வருக
 முதற்பணியாய் இப்பேழை பெறுக.

———

## தாமரைச் செல்வர்
## வ. சுப்பையா பிள்ளையவர்களுக்குச்
## சென்னை, பாரதி இளைஞர் சங்கத்தின்
## பாராட்டு

மகாகவி சுப்பிரமணிய பாரதியார் பிறந்தநாள் விழாவினைப் பாரதி இளைஞர் சங்கம் 1975 திசம்பர் 6 முதல் 14 வரை சென்னை நகரின் பல இடங்களில் பெருவிழாவாக நடத்துகின்றது. அதன் தொடக்க விழா 6—12—75 சனிக்கிழமையன்று மயிலை அருள்மிகு கற்பகாம்பாள் கலியாண மண்டபத்தில் பாரதி இளைஞர் சங்கத்தின் தலைவர் திரு. கே. இராமமூர்த்தி அவர்கள் தலைமையில் நடைபெற்றது. தொடக்க விழாவில் கழக ஆட்சியாளர் தாமரைச் செல்வர் திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்கட்குப் பாராட்டு விழாவும் இணைக்கப் பெற்றது. இசைமணி சீர்காழி கோவிந்தராசனின் இறை வாழ்த்துடன் விழா தொடங்கியது.

தலைவர் திரு. கே. இராமமூர்த்தி அவர்கள் "பாரதி இளைஞர் சங்கத்தின் ஆண்டு விழாவில் தமிழ்ப் பணி ஆற்றும் பெரியோர்களை ஆண்டுதோறும் பாராட்டுவதுபோல் இவ்வாண்டு 1500க்கு மேல் அரிய நூல்கள் வெளியிட்டும், சென்னையில் சிறந்த தமிழ் ஆராய்ச்சி நூல் நிலயத்தை நடத்தியும் தமிழுக்குச் சிறந்த பணி ஆற்றியும் வருகின்ற தாமரைச் செல்வர் திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்களைப் பாராட்ட முற்பட்டுள்ளோம். அவர்கள் பவளவிழாவில் தமிழக முதல்வர், டாக்டர் கலைஞர் அவர்கள் "தாமரைச் செல்வர் அவர்கட்கு எத்தனை சங்கங்கள் பாராட்டினாலும் தகும்'' என்று தம் தலைமையுரையில் குறிப்பிட்டார்.

பொன்னாடை போர்த்திய மாண்பமை நீதிபதி என். கிருஷ்ணசாமி ரெட்டியார் அவர்கள் "தமிழுக்கு ஐம்பது ஆண்டுகட்கு மேலாக அரும் பணியாற்றிவரும் சுப்பையா பிள்ளை அவர்கள் நம் எல்லோருடைய பாராட்டுதலுக்கும் உரியவர்கள். அவர்கள் செய்துள்ள சிறந்த பணி களுள் சைவ, வைணவ திருமுறை, திவ்யப்பிரபந்த நூல்களையெல்லாம் அழகாக அச்சிட்டுப் பேழையில் வைத்தளித்தது குறிப்பிடத்தக்க தாகும்'' என்று பாராட்டினர்.

பாராட்டுரை வழங்கிய முன்னாள் அமைச்சர் திரு. கோ. பூவராகன் அவர்கள் "பழந்தமிழ் இலக்கியங்களைக் கரையானுக்கும் செல்லுக்கும் இரையாக்காது காப்பாற்றிய பெருமை சுப்பையா பிள்ளை அவர்களுக்கே உண்டு. இன்னும் பழைய நூல்களும் ஏடுகளும் கிடைக்குமானால் அவை விற்பனையாகுமா ஆகாதா என்று பாராது அவற்றை உடனே அச்சேற்றுவதில் அவர்களை விஞ்ச எவராலும் முடியாது. இத்தனை வயதான நிலையிலும் இளைஞர்போல் அவர் தமிழ்த் தொண்டாற்றுவதற்கு அவருக்கு உறுதுணையாயிருக்கும் அவர்தம் இல்லத்து அரசியாரையும் நான் பாராட்ட வேண்டும்'' என்று குறிப்பிட்டார்.

கல்கியின் துணையாசிரியரான திரு. எஸ். வி. எஸ். அவர்கள் தாமரைச் செல்வரைப் பாராட்டுகையில் "சிறு வயதில் அவர்கள் வெளி

யிட்ட காலம், அரையண வெளியீடுகளிலிருந்து இன்றுவரை நான் தொடர்ந்து கழக வெளியீடுகளைப் படித்து வருகிறேன். இன்று தமிழ் தொடர்பான எந்த ஐயம் ஏற்பட்டாலும் நாங்கள் கல்கி காரியாலயத்தி லிருந்து கழகத்தோடுதான் தொடர்பு கொள்வோம். வெளிநாட்டி லிருந்து என் நண்பர்கள், இலங்கை சு. நடேசபிள்ளை போன்றோர் இங்கே வந்தால் நேராகக் கழகத்திற்குத்தான் சென்று 500, 600 ரூபாய்க்குத் தமிழ் நூல்கள் வாங்குவார்கள். ஆயிரத்துக்கு மேற்பட்ட அரிய நூல் களைப் பதித்துள்ள பத்மஸ்ரீ சுப்பையா பிள்ளை அவர்களை எழுத்தாளர் என்ற முறையில் நான் பாராட்ட விரும்புகிறேன்'' என்றார்.

ஆசுகவி அப்துல் கபூரின் மகனார் அவர்கள் அங்கேயே இயற்றப் பட்ட ஆசுகவியைப் பாடிப் பாராட்டினார். பாரதி இளைஞர் சங்கத்தின் சார்பில் கவிஞர் கோவூர் இசைதாசன் இயற்றிய ''பாராட்டுக் கவிமலர்'' தாமரைச் செல்வரவர்கட்கு வழங்கப் பெற்றது.

## "பாராட்டுக் கவிமலர்"

[வழங்கியவர்: கவிஞர் கோவூர் இசைதாசன்]

நெல்லையிற் பிறந்த நல்லீர்!
நினைத்ததை முடிக்க வல்லீர்!
அல்லொடு பகலு ழைத்தே
அருந்தமிழ்க் "கழகம்" கண்டு
சொல்லுதற் கரிய சைவச்
சுவைநூல்கள் எமக்க ளித்த
நல்லதோர் இதயம் பெற்ற
நற்றமிழ்ப் பெரியீர் வாழி!

தன்னிரு கண்கள் போலத்
தமிழொடு சைவந் தன்னை
நன்முறை தன்னிற் காக்க
நாளெலா முழைத்த நல்லீர்!
உன்னருஞ் சேவைக் கீடு
உரைத்திடப் போமோ இங்குத்
தன்னிக ரில்லா ஐயா!
தாமரைச் செல்வ! வாழி!

தனியொரு நபராய் நின்று
தமிழொடு சைவத் திற்கு
இனியநற் சேவை செய்தே
இன்றுநீர் உயர்ந்து விட்டீர்
மனிதருள் உம்மைப் போன்று
மாண்புகள் பெற்றோர் யாரே!
புனிதரே உமைப்பா ராட்டப்
புண்ணியம் என்செய் தேமோ!

'பொன்விழா' கழகம் கண்டு
பொலிந்ததுன் திறத்தா லன்றோ!
பன்னருங் கலைக்கூ டங்கள்
பகர்வதுன் சிறப்பை யன்றோ!
தன்னிக ரில்லாச் சேவை
தரணிக்குத் தந்த உம்மை
என்னவென் றேத்திப் போற்றி
இயம்புவ திங்கே ஐயா!

நல்லநூல் நிலைய மொன்றை
நலமுடன் சென்னை தன்னில்
மல்லிகேச் சுரர்கோ யில்முன்
"மறைமலை அடிகள்" பேரில்
பல்விதச் சிறப்பி னோடு
பாங்குடன் அமைத்தீர்; அஃது
பல்லவச் சிற்பம் போலப்
பாடுமுன் புகழை ஐயா!

நந்தமிழ்ச் சுவடி யெல்லாம்
நாளுமுன் புகழைப் பாடும்
"செந்தமிழ்ச் செல்வி" யாலுன்
சிறப்புகள் தினமுங் கூடும்
இந்தவோர் மன்ற மின்றி
இனித்தோன்றும் மன்ற மெல்லாம்
சந்ததம் உன்னைப் போற்றும்
சரித்திரம் படைத்தீர் வாழி!

---

## பள்ளிமாணவர் பல்வகை நூல்கள்
## பேழை அறிமுகவிழாவிற்கு அன்பு வாழ்த்து

பள்ளிதனில் பயில்கின்ற பைந்தமிழ்கொள்
மாணவர்கள் பயன்பெற் றோங்க
பல்வகைசேர் பனுவலினைப் பல்வண்ணப்
பெட்டிகளில் பாங்காய் வைத்தே
உள்ளத்திற் கூக்கத்தை, உணர்ந்தாயும்
உயர்திறனை யூட்டி நிற்கும்
நல்லதொரு பேழைதன்னை நமக்களித்த
கழகத்தார் நாளும் வாழ்க.

—பெ. முனியப்பன்

# செய்திகளும் குறிப்புகளும்

## ''நமது நிலையில் சமயம் - சமுதாயம்''

ஆசிரியர் : தவத்திரு குன்றக்குடி அடிகளார்.

*1974-75* சொர்ணம்மாள் அறக்கட்டளைச் சொற்பொழிவாக, தவத்திரு குன்றக்குடி அடிகளார் 'சமயம்-சமுதாயம்' 'சமய மறுமலர்ச்சி' 'சமய சமுதாய மறை' என்னும் முப்பெருந் தலைப்புகளில் சென்னைப் பல்கலைக் கழகத்தில் நிகழ்த்திய பேருரைகளின் தொகுப்பே ''நமது நிலையில் சமயம்-சமுதாயம்'' என்னும் நூலாகும்.



தனி மனிதன் சமயத் துறையிலும், சமுதாயத்திலும், உலகிலும் முன்னேற-மறுமலர்ச்சி பெறத் திருக்குறள் எவ்வெவ் வகைகளில் பயன்படுகின்றது என்பதைத் தக்க சான்றுகளோடு அடிகளார் இந் நூலுள் விளக்கியுள்ளார். இந் நூலின் வெளியீட்டு விழா 28—10—75 இல் தெய்விகப் பேரவையின் சார்பில், பல்கலைக் கழகப் பேரவை அரங்கில் மாண்புமிகு டாக்டர் நாவலர் நெடுஞ்செழியன் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. முதல்வர் மாண்புமிகு டாக்டர் கலைஞர் அவர்கள் நூலினை வெளியிட, மாண்புமிகு மு. கண்ணப்பன் அவர்கள் நூலினைப் பெற்றார். சீலத்திரு ஞானப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகளும் மற்றும் அறிஞர் பலரும் நூலினைப் பாராட்டி வாழ்த்துரை வழங்கினர்.

## குழந்தை இலக்கியப் பரிசு

சென்னைக் குழந்தை எழுத்தாளர் சங்கம், ஏ. வி. எம். அறக்கட்டளையின் குழந்தை இலக்கியப்போட்டி ஒன்றை ஆண்டுதோறும் நடத்தி வருகின்றது. இவ்வாண்டு நடந்த கவிதை, வரலாறு, கையெழுத்துப் பிரதிக்கான போட்டியில், கவிதைக்கான முதல் பரிசு—தங்கப் பதக்கத்தைத் தமிழ் எழுத்தாளர் திரு. பி.வி. கிரி அவர்கள் பெற்றுள்ளார் என்பதையும், கவிதைக்கான இரண்டாம் பரிசைத் திரு. ரா. பொன்ராசன் அவர்களும், வரலாற்றுக்கான முதல் பரிசைத் திரு. அழ.வே. இராமசாமி அவர்களும், இரண்டாம் பரிசைத் திரு. பூவண்ணன் அவர்களும் பெற்றனர் என்பதையும் மகிழ்ச்சியோடு தெரிவித்துக் கொள்கிறோம்.

பரிசளிப்பு விழா நவம்பர் 14ஆம் நாள் குழந்தைகள் நாளன்று சென்னை மாக்ஸ் முல்லர் பவனில் திருமதி. சௌந்தரா கைலாசம் அவர்கள் தலைமையில் நடந்தது. மக்கள் நல்வாழ்வுத்துறை அமைச்சர் பேராசிரியர் க. அன்பழகன் அவர்கள் வெற்றி பெற்ற எழுத்தாளர் களுக்குத் தங்க, வெள்ளிப் பதக்கங்களை வழங்கிச் சிறப்புரையாற்றினார்.

## டாக்டர் இரா. தண்டாயுதத்திற்குச் சாகித்ய அகாதெமி விருது

மலேயப் பல்கலைக் கழகத்தின் தமிழ்த்துறையில் பணியாற்றிவரும் டாக்டர். இரா. தண்டாயுதம், எம்.ஏ., பி.எச்.டி அவர்களுக்கு இவ் வாண்டு தமிழில் சிறந்த நூல் எழுதியமைக்காகச் சாகித்ய அகாதெமி, விருது வழங்கியுள்ளது. அவர் எழுதிய 'இன்றைய தமிழ் இலக்கியம்' என்ற நூல் ரூ. ஐயாயிரம் பரிசு பெறுகிறது.

டாக்டர். இரா. தண்டாயுதம் சிறந்த ஆய்வாளர், கவிஞர், பேச்சாளர், பல்துறை அறிஞர். சென்னைப் பச்சையப்பன் கல்லூரியில் தமிழ் எம்.ஏ. பட்டம் பெற்றபின் பேராசான் டாக்டர் மு. வ. அவர் களிடம் தமிழ் நாவல்கள் என்ற தலைப்பில் ஆய்வு செய்து பிஎச்.டி. பட்டம் பெற்றார். அதன்பின் மலேயப் பல்கலைக் கழகத்தில் பணி யாற்றச் சென்று கடந்த ஐந்தாறு ஆண்டுகளாக அங்குச் சிறந்த பணி யாற்றி வருகின்றார்.

பரிசு பெற்ற 'இன்றைய தமிழ் இலக்கியம்' தற்காலத் தமிழிலக் கியத்தைப் பற்றிய சிறந்த ஆய்வு நூல். அதைத் தொடர்ந்து 'நாவல் வளம்' 'மு. வ. இலக்கியங்கள் 'டாக்டர் மு. வ.' போன்ற அரிய நூல் களையும் அவர் படைத்துள்ளார். இவை அனைத்தும் அவர் தற்காலத் தமிழிலக்கியத்தில் அவருக்குள்ள ஆழ்ந்த புலமையையும் ஈடுபாட்டை யும் நன்கு புலப்படுத்துகின்றன. ஆய்வு நூல்களாயினும் சுவையான விறுவிறுப்பான நடையில் எழுதப் பெற்றவை இவை.

'மலரும் மலர்' என்ற அவர்தம் கவிதைத் தொகுப்பு அவர் ஒரு சிறந்த கவிஞர் என்பதைக் காட்டுகின்றது. இதுவரை தமிழ் மொழியில் 'சாகித்ய அகாதெமி' விருது பெற்றவர்களில் இவரே மிக இளைஞர். இவ்வளவு இளமையிலேயே இத்தகைய சிறந்த, உயர்ந்த விருதைப் பெற்ற டாக்டர் இரா. தண்டாயுதம் அவர்களைப் பாராட்டுகிறோம்.

## இந்திய உயர் ஆராய்ச்சி நிலையத்தின் ஆய்வுப்பணி

இமயத்தின் மடியில் தவழும் இந்திய உயர் ஆராய்ச்சி நிலையம் (Indian Institute of Advanced Study) இந் நாட்டிலுள்ள பட்டங்கள் வழங்கும் பல்வேறு பல்கலைக் கழகங்கள் போலன்றி உயர் ஆராய்ச்சிக்கு ஊக்கமளிக்கும் பெரும் பல்கலைக் கழகமாக, ஆய்வுப் பெருங் கூடமாகத் திகழ்கின்றது. பல்துறையறிவின் பேரெல்லையை விரிவுபடுத்தவும் துருவி ஆயவும் மறைந்த இந்தியக் குடியரசுத் தலைவர் டாக்டர் எஸ். இராதாகிருட்டிணன் அவர்கள் 1965 அக்டோபர் 20இல் இதனைத் தொடங்கி வைத்தார். இந்நிலையம் அவர்தம் நன்கொடை - நல்லறிவுக் கொடை.

இதன் முதல் இயக்குநராகத் திகழ்ந்த டாக்டர் நிகரஞ்சன் ராய் நிலையத்தின் வளர்ச்சிக்குப் பெரும் பாடுபட்டு பல்வேறு திட்டங்களை நிறைவேற்றினார். அதன் பயனாய் இன்று உலகமே வியக்குமளவிற்குச் சிறந்த ஆய்வுக் களமாகத் திகழ்கிறது.

ஏறத்தாழ அறுபது அறிஞர்கட்குமேல் இதுவரை இந்நிலையத்தில் தங்கி, இந்திய/ஆசியப் பண்பாடு பற்றியும் பழங்குடி மக்கள் மரபு பற்றியும் சிறப்பாய்வு நடத்திச் சிறந்த ஆய்வு நூல்களை வெளியிட்டுள்ளனர்.

அவ்வப்போது இந்தியா முழுவதிலுமுள்ள பல்கலைக்கழகப் பேராசிரியர்களையும் அழைத்துப் பல்பொருள் பற்றிய கருத்தரங்குகளை இந்நிலையம் நடத்துகிறது. பன்மைக்கும் ஒருமைக்கும் - பழைமைக்கும் புதுமைக்கும் பாலமாய் அமைந்துள்ள இந் நிறுவனத்தை அதன் இயக்குநராக அமைந்துள்ள திரு. டுபே மிகத்திறம்பட நடத்தி வருகிறார்.

ஒருசில பொருள் பற்றிய கருத்தரங்குகள் ஏழெட்டு முறை நடைபெறுகின்றன. இந்திய/ஆசியப் பண்பாடு பற்றிய அடிப்படை நூல்களை உருவாக்குவதில் ஈடுபட்டுள்ள இந்நிலையம் இதுவரை மூன்று நூல்களை இத் துறையில் வெளியிட்டுள்ளது. இந்தியா 1947-72, இந்தியாவின் மொழிகளும், சமுதாயமும் இந்திய இலக்கியம் போன்ற அரிய நூல்கள் அறுபதுக்கு மேற்பட்டவை இந்நிலையத்தின் வழி வெளிவந்துள்ளன. உயர்நிலை ஆராய்ச்சிக்கு வழிவகுக்கும் இந் நிறுவனம் மேன்மேலும் சிறப்பதாக.

## சிறந்த தமிழ் நூல்களுக்குப் பரிசளிப்பு விழா

தமிழக அரசின் தமிழ் வளர்ச்சி ஆராய்ச்சி மன்றத்தின் சார்பில் சிறந்த நூல்களுக்குப் பரிசளிப்பு விழா 21—11—75இல், சென்னை இராசாசி மண்டபத்தில், கல்வி அமைச்சர் மாண்புமிகு டாக்டர் நாவலர் நெடுஞ்செழியன் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. தமிழ் வளர்ச்சிக் கழக இயக்குநரும், தமிழ் வளர்ச்சி ஆராய்ச்சி மன்றச் செயலாளருமான பேராசிரியர் கொண்டல் சு. மகாதேவன் அவர்கள் வரவேற்புரை நிகழ்த்தினார்.

தமிழக வரலாற்றுக் குழுவின் தலைவர் ஔவை சு. துரைசாமிப் பிள்ளை அவர்கள், 'தமிழக வரலாறு' என்னும் நூலின் முதல் தொகுதியை முதல்வர் கலைஞர் அவர்களிடம் வழங்க, அதனைக் கலைஞர் அவர்கள் அமைச்சர் நாவலர் அவர்களிடம் வழங்கி வெளியிட்டார்.

அடுத்து 1971-72ஆம் ஆண்டுகளில் வெளிவந்த சிறந்த நூல்களுள் 12 நூல்கட்கு முதற்பரிசும், 8 நூல்கட்கு இரண்டாவது பரிசும் கலைஞர் அவர்களால் வழங்கப்பெற்றன. முதற் பரிசு 2000 பொற்காசுகளும் இரண்டாவது பரிசு ஆயிரம் வெண்பொற் காசுகளுமாக வழங்கப் பெற்றன. அத்துடன் சிறந்த நூல்களை வெளியிட்ட பதிப்பகங்கட்கு நற்சான்றிதழ்களும், சிறந்த வரைவாளர் இருவருக்குப் பணப் பரிசும் வழங்கப் பெற்றன.

இப் பரிசளிப்பில் டாக்டர் கண்ணப்பர் அவர்களைத் தலைமையாகக் கொண்ட நான்கு பல் மருத்துவர்களால் எழுதப்பெற்றுக் கழக வெளியீடாக 1972இல் வெளிவந்துள்ள வாய், பல் மருத்துவம் என்னும் நூல் இரண்டாவது பரிசினைப் பெற்றமையும், கழகம் நற்சான்றிதழ் பெற்றமையும் குறிப்பிடத்தக்கன.

## கலைஞர் கருத்துரை

நூல்களை வெளியிட்டு முதல்வர் டாக்டர் கலைஞர் அவர்கள் சிறப்புரையாற்றுகையில், "தேவநேயப் பாவாணர் அவர்கள் தலைமையில் அகர முதலி தயாரிக்கும் பெரு முயற்சியை இந்த அரசின் சார்பில் மேற்

கொண்டிருக்கிறோம். தமிழ்ச் சொற்களை-இலட்சக் கணக்கான சொற்களை மக்கள் புரிந்து கொள்ளுகிற வகையில், மறைந்தும் அழிந்தும் போன சொற்களை வெளிக்கொணர வேண்டும் என்ற அடிப்படையில் பெரிய அகராதி ஒன்று தயாரிக்கப்பட வேண்டும் என்று பாரிசில் நடைபெற்ற உலகத்தமிழ் மாநாட்டில் நான் வெளியிட்ட கருத்து செயல்பட வேண்டும் என்பதற்காக இந்த அகரமுதலி தயாரிக்கும் பொறுப்பு தேவநேயப் பாவாணர் அவர்களிடம் ஒப்படைக்கப் பெற்றிருக்கிறது. அந்நூல் முழுமை பெற்று வெளிவருமானால், அது தமிழருக்குக் கிடைத்த ஒப்பற்ற கருவூலமாக இருந்திடும். தமிழர்களுடைய வரலாறு எழுதப்படவேண்டும் என்று நாங்கள் முயன்று அதன் முதல் பகுதியை இன்று வெளியிட்டிருக்கிறோம். இதைத் தொடர்ந்து அடுத்த தொகுதி கிட்டத்தட்ட தயாராகி விட்டது என்று நான் கருதுகிறேன்.

"இந்த நிலத்திற்கு முதலில் தமிழ்நாடு என்றோ தமிழ் நிலம் என்றோ பெயரில்லாமல் தமிழ் என்ற மொழியின் பெயராலேயே அழைக்கப் பட்டது என்னும் அருமையான கருத்தும் இந்த நூலில் சொல்லப்பட்டிருக்கிறது.

"இன்னுங்கூட தேவநேயப் பாவணர் ஆராய்ச்சியில் ஒன்றைச் சொல்லுகிறார். உலகத்திலே தமிழுக்கு முதலில் மொழி என்றுதான் பெயர். பிறகு தான் தமிழ் என்று வந்தது. ஆரம்பத்தில் ஒரே மொழி தான் இருந்தது. அது தமிழ்; ஆகவே அதனை மொழி என்றே குறிப்பிட்டார்கள். பிறகுதான் பல மொழிகள் தோன்றி, அவற்றிலிருந்து நம்முடைய மொழியைப் பிரித்துக் காட்ட, தமிழ் மொழி என்று சொல்லப்பட்டது என்று கூறுகிறார்.

"இப்படிப்பட்ட மொழிவளம், நிலவளம், நீர்வளம், மனவளம், அறிவு வளம், கலை வளம், கலாச்சார வளம், பண்பாட்டு வளம் ஆகிய எல்லா வளங்களும் பெற்ற இத்தமிழ் கூறும் நல்லுலகத்தைப் பற்றிய வரலாற்றை வெளிக்கொணரும் இனிய முயற்சி தொடர்ந்து நடைபெறத் தமிழ்ப் பெருங்குடி மக்களின் வாழ்த்துகள் நிச்சயமாகக் கிடைக்குமென்று நம்புகிறேன்'' என்றார்.

## பேராசிரியர் லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார் மணிவிழா

பேராசிரியர் லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார் அவர்களின் மணிவிழா செட்டிநாட்டரசர் இராசா சர் முத்தைய செட்டியார் அவர்கள் தலைமையில் சென்னையில் 20-12-75 இல் சிறப்பாக நடைபெற விருக்கிறது. பேராசிரியர் அவர்களின் மணிவிழா பற்றிய செய்திகள், வரலாற்றுக் குறிப்பு இன்னபிற பின்னர் வெளியிடப்பெறும்.

## நூலகர்களுக்குச் சென்னைப் பல்கலைக் கழகத் துணை வேந்தர் அறிவுரை

சென்னைப் பல்கலைக் கழக நூலகம் நடத்திய தேசிய நூலக வார விழாவைத் தொடங்கி வைத்த அதன் துணைவேந்தர் டாக்டர். மால்கம் ஆதிசேஷையா 'பல்கலைக் கழக நூலகம் அறிவியல் தொழிலியல் செய்தி அறிவிப்பு நிலையமாகத் திகழவேண்டும்' என்றும், பல்கலைக் கழக நூல் வெளியீட்டுப் பணியை நூலகம் மேற்கொள்ள வேண்டுமென்றும், நூலகங்களை எவ்வாறு பயன்படுத்த வேண்டுமென்று பொதுமக்களுக்கு நூலகர்கள் பயிற்சி அளிக்கவேண்டுமென்றும், நூலகர் ஒவ்வொன்றைப்

பற்றியும் ஓரளவு அறிவாவது படைத்த 'சிறந்த கல்வியாள'ராகத் திகழ வேண்டுமென்றும் கூறினர்.

விழாவிற்குத் தலைமை தாங்கிய திரு. க. அறிவழகன் அவர்கள் பல்கலைக் கழக நூலகத்தைப் பொதுமக்கள் பயன்படுத்தத் திறந்து விட வேண்டுமென்றார்.

பல்கலைக் கழக நூலகர் திரு. பி. ஏ. மோகன்ராசு விழாவிற்கு வந்திருந்த அனைவரையும் வரவேற்றார்.

## இசைப் பேரறிஞர் சித்தூர் சுப்பிரமணிய பிள்ளை மறைவு

சித்தூரையடுத்துள்ள பலமனேரி என்னும் ஊரில் 1899 ஆம் ஆண்டில் பிறந்தவரும் சங்கீத கலாநிதி என்னும் பட்டம் பெற்றவரும் கடந்த 50 ஆண்டுகளாக இசைத்துறையில் பெரும் புகழ் பெற்றிருந்தவரும், காஞ்சிபுரம் இசைநுண் பேரறிஞர் நயினாபிள்ளை யவர்களின் மாணாக்கருமான சித்தூர் சுப்பிரமணிய பிள்ளையவர்கள் தமது 76 ஆவது அகவையில், சென்னையில் காலமானார் என்ற செய்தியறிந்து பெரிதும் வருந்துகிறோம்.

தமிழிசைச் சங்கம் இவருக்கு ''இசைப் பேரறிஞர்'' என்னும் பட்ட மளித்துச் சிறப்பித்தது. 1964 இல், இவரது கர்நாடக இசைத்திறனைப் பாராட்டி சாகித்ய நாடக அகாடமி விருதினை வழங்கிற்று. இவர் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் இசைத் துறைத் தலைவராகவும், சென்னை இசைக் கல்லூரியிலும், திருப்பதி வெங்கடேசுவரா பல்கலைக் கழகத்திலும் இசைப் பேராசிரியராகவும் பணியாற்றியுள்ளார். திருவையாறு அரசர் கல்லூரியைச் சார்ந்த இசைக் கல்லூரியின் முதல்வராகவும் சில காலம் பணியாற்றினர். அங்ஙனமே இலங்கை சுன்னாகத்தில் இராமநாதன் இசைக்கழக முதல்வராகப் பணியாற்றினர். திருவாவடுதுறை ஆதீன வித்துவானாகவுமிருந்தார். நமது கழகம் 1941 மே திங்கள் நெல்லையில் நடத்திய மெய்கண்ட சாத்திர மாநாட்டில் திரு. பிள்ளை அவர்கட்கு 'இசை மன்னர்' என்ற பட்டம் வழங்கிப் பாராட்டியது.

திரு. பிள்ளையவர்கட்குத் திருப்புகழ் பாடுவதில் ஆர்வமிகுதியுண்டு. அண்ணாமலைப் பல்கலைக் கழக வாயிலாக 100 திருப்புகழ்ப் பாக்களுக்கு இசைக் குறிப்புகள் வரைந்து வெளியிட்டுள்ளார்.

## அம்மை-அம்பலவாணர் அரிய சிலை கண்டுபிடிப்பு

தஞ்சை மாவட்டத்தில் ஒரு சிற்றூரில் அரிய அம்மை-அம்பலவாணர் வெண்கலச் சிலையொன்று அண்மையில் தொல்பொருள் ஆய்வுத் துறையினரால் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. சிவபெருமானும் உமையம்மையாரும் அமர்ந்த நிலையிலுள்ள இச் சிலையில் பல அரிய அமைப்புகள் காணப்படுகின்றன. நான்கு கைகளுடன் காணப்படும் சிவபிரானின்மேல் இரண்டு கைகளிலும் அக்க மாலைகள் உள்ளன. வலக் கையில் உருத்திராக்க மாலையும், இடக் கையில் படிக மாலையும் காணப் படுகின்றன. இதுகாறும் கண்டிராத கோலமாகும் இது. கீழிடக்கை தவநிலையிலும், வலக்கை அபயமளிக்கும் நிலையிலும் அமைந்துள்ளது. சிவபிரானின் கீழாடை கணுக்கால் வரையிலும் காணப்படுவது மற்றொரு சிறப்பாகும். பெரும்பாலும் இவ் வாடை முழங்கால் வரையிலுந்தான் காணப்படும். திருவுடலில் பூணூல் ஒன்று பட்டையாக வலக் கையின் வழிச் செல்கிறது. பக்கத்தில் அழகே உருவான உமையம்மையின் திருவுருவும் அமர்ந்த நிலையில் காணப்படுகின்றது. கண்டெடுக்கப்பட்டிருக்கும் இச் சிலை மூன்றும் நந்திவர்மன் காலத்துச் சிலையாக இருக்கலாமெனத் தொல்பொருள் ஆய்வுத்துறை இயக்குநர் கருதுகின்றனர்.

## சென்னையில் தேசீய நூலக வார விழா

தமிழ் நாடு அரசின் பொது நூலகத்துறை சென்னை இராசாசி மண்டபத்தில் தேசீய நூலக வார விழாவை நவம்பர் 14 முதல் 20 வரை நடத்தியது. தமிழகக் கல்வி அமைச்சர் டாக்டர். நாவலர் இரா. நெடுஞ்செழியன் விழாவையொட்டி அமைக்கப் பெற்றிருந்த நூற்காட்சியைத் திறந்து வைத்தார். பல பதிப்பாளர்கள் கலந்து கொண்ட இக்காட்சியில் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகமும் பங்கு கொண்டது. விழாவின் முடிவில் காட்சியில் கலந்து கொண்டோருக்குச் சான்றிதழ் வழங்கப் பெற்றது. நூலகத்தின் பயனைக் கூறும் கவியரங்கமும் நடை பெற்றது.

## அறிவியல் கண்காட்சி

திருச்சி கி. ஆ. பெ. விசுவநாதம் உயர்நிலைப்பள்ளி நவ 21, 22 ஆகிய இருநாட்களிலும் அறிவியல் கண்காட்சியை நடத்தியது. சைவ சித்தாந்தக் கழகத்தின் திருச்சிக் கிளை இக்காட்சியில் பங்கேற்றது.

## துளசிதாசர் இராமாயணம் படச்சுருளாக்கல்

துளசிதாசரின் கையெழுத்துப்படியான இராமாயணத்தை உத்தரப் பிரதேச அரசு (Micro film) படச்சுருளாக்க முன் வந்துள்ளது.

## நூறுண்டு கண்ட நூலகம்

இராமநாதபுர மாவட்டத்திலுள்ள திருவில்லிபுத்தூரிலுள்ள 'பெனிங்டன் பொது நூலகம்' அதன் நூற்றுண்டு விழாவை அண்மையில் கொண்டாடியது.

அற உள்ளம் படைத்த திரு. சரவணமுத்துப் பிள்ளையால் தொடங்கப் பெற்ற இந்நூலகம் பன்னீராயிரம் நூல்களும் பல்வேறு இதழ்களும் பெற்றுள்ளது. ஐந்தாண்டுகளுக்கு முன்னர் இரண்டரை இலக்க ரூபாய் செலவில் விரிவுபடுத்தப் பட்டது. பல அரிய நூல்களைத் தன்னகத்தே கொண்ட இதனை நாள்தோறும் 250 பேர் பயன்படுத்துகின்றனர். இதன் செயலாளர் திரு. ஆர். வி. இராமசுந்தரம் பிள்ளை இதனை இன்னும் சிறப்பான முறையில் நடத்தத் திட்டமிட்டு உழைத்து வருகிறார்.

## மராத்திய மொழியில் தமிழ் பற்றிய நூல்

திரு. ஏ. வி. சுப்பிரமணியம் எழுதிய கழக வெளியீடான 'Sips from the Sangam Cup' என்னும் நூல் மராத்திய மொழியில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. சங்க இலக்கியத்தின் சுவையைப் பிழிந்து கொடுப்பது இந்நூல்.

## மகாபலிபுரம் 'மாமல்லபுரம்' ஆகிறது

மகாபலிபுரம் என்னும் பெயர் பொருத்தமற்றது என்றும் 'மாமல்லபுரம்' என்பதுதான் வரலாற்று அடிப்படையில் அமைந்த பெயர் என்றும் நடுவணரசுக்குத் தமிழ்நாடு அரசு எழுதி, அதற்கேற்பப் பெயர் மாற்றம் செய்ய வேண்டுமென்று கேட்டிருந்ததாகவும், அதற்கு நடுவண் அரசு ஒப்புதல் கிடைத்து விட்டதென்றும் தமிழக முதல்வர் டாக்டர் கலைஞர் அவர்கள் அண்மையில் தெரிவித்தார்.

# மதிப்புரை

## Dr. Mu. Va. (Collection of research papers on Dr. Mu. Va.)

Editors S. V. Subramaniam, A. A. Manavalan International Institute of Tamil Studies, Madras-20. Rs. 20-00.

மறைந்த பேரறிஞர் டாக்டர் மு. வ. அவர்களின் அறிவாற்றலை, பண்புநலனை மேனாட்டாருக்கு விளக்கும் வகையில் 21 ஆய்வுக் கட்டுரைகளை ஆங்கிலத்தில் வடித்துத் தந்திருப்பது இந்நூல். 'மறைவாக நமக்குள்ளே பழம் பெருமை பேசுவதை' விட்டு உலகுக்குத் தமிழறிஞரின் தனிச்சிறப்பை எடுத்துக் காட்டும் இந்நூல் உருவிலும் அமைப்பிலும் மேனாட்டு வெளியீடு போலவே சிறப்பாக அமைந்துள்ளது. டாக்டர் மு. வ. வையும் அவருடைய நூல்களையும் பல்வேறு கோணங்களிலிருந்து பார்த்துக் கட்டுரையாளர்கள் நமக்கு அவரை நல்ல முறையில் அறிமுகப் படுத்துகிறார்கள். ஐந்து கட்டுரைகள் மு. வ. வின் பண்பு நலனைப் பாராட்ட, பதினாறு கட்டுரைகள் அவர்தம் புதினங்கள், சிறுகதைகள், நாடகங்கள், வரலாற்று நூல்கள், கட்டுரை நூல்கள் போன்றவற்றை ஆய்வுசெய்து அவரைச் சிறந்த சிறுகதையாளராக, புதினக்காரராக, நாடகாசிரியராக, கட்டுரையாளராகத், திறனாய்வாளராக அறிமுகப் படுத்துகின்றன. வேறு எவரும் செய்ய முடியாத இம்முயற்சியை மேற்கொண்டதற்காக நிறுவனத்தைப் பாராட்டுகிறோம்.

## சிரித்து மகிழுங்கள்—(ஓர் இரசனை)

டாக்டர். ரா. சீனிவாசன், அணியகம், சென்னை-30. ரு. 10-00

இன்பமும் துன்பமும் நிறைந்த மனித வாழ்விற்கு இன்றியமையாத சுவை நகைச்சுவை. அதனைத் துணுக்குகளில் பல வார இதழ்கள் வழங்கி வருகின்றன. அவற்றைத் தொகுக்கும் முயற்சியில் நூலாசிரியர் ஈடுபட்டதன் விளைவே இந்நூல். 320 பக்க நூலில், நூல் 64 பக்கங்கள். பின்னிணைப்பு 254 பக்கங்கள். பின்னிணைப்பில் 915 துணுக்குகள் தொகுத்தளிக்கப்பெற்றுள்ளன. ஆசிரியரின் நகைச்சுவையைப் பற்றிய ஆராய்ச்சியே நூலுக்கு உயிரோட்டமாக அமைந்துள்ளது. இச் சுவை பற்றி இதுவரை யாரும் செய்யாத ஆராய்ச்சி. நகைச்சுவையின் வடிவமும் வகைகளும் திறம்பெற விளக்கப் பெற்றுள்ளன. ஆங்கிலத்தில் இதுபோன்ற நூல்கள் நூற்றுக்கணக்கிலிருக்கத் தமிழில் இல்லாத குறையை இந்நூல் போக்கியுள்ளது.

## பாரதிதாசனில் புதியபார்வை

[ஆசிரியர் : அ. அறிவொளி எம்.ஏ., சோழன் பதிப்பகம், முத்துப் பேட்டை, தஞ்சை மாவட்டம். விலை : ரு. 10]

"சாகும் போதும் தமிழ்படித்துச் சாகவேண்டும் என்றன் சாம்பலிலும் தமிழ் மணம் கமழவேண்டும்" என மார் தட்டித் தமிழின்பத்திலேயே வாழ்க்கை முழுவதும் கிடந்து சிறந்த கதைகளையும், கருத்துகளையும் தேனினுமினிய தீந்தமிழ்க் கவிதைகளாகத் தமிழ் நெஞ்சங்கட்குத் தந்த பாரதிதாசனின் இனிய கவிதைக் கருவூலங்களைத் திறனாய்வுக் கண்ணோட்டத்துடன் துருவி ஆய்ந்துள்ள இவ்வாசிரியரின் ஆய்வுத்திறன் பாராட்டற்குரியது. திறனாய்வாளர்கள் விரும்பிப் படிக்கத் தக்க அரிய நூல்.

---

திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை 2/140, பிரகாசம் சாலை, அப்பர் அச்சகத்தில் திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிடப்பெற்றது.
ஆசிரியர் : வ. சுப்பையா.

# வெளியார் புதிய வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| கவிமணிதேவி மலர் —தே. ப. பெருமாள் | 10 | 00 |
| நமது நிலையில் சமயம்-சமுதாயம் | | |
| —குன்றக்குடி அடிகளார் | 5 | 00 |
| குறள்நெறியும் சித்தநெறியும் —பசும்பொற்கிழார் | 2 | 00 |
| இரு விழிகள் —என். ஏ. வேலாயுதம் | 15 | 00 |
| சமுதாய மொழியியல் —டாக்டர் கி. கருணாகரன் | 10 | 00 |
| தவிப்பு —கதைப்பித்தன் | 5 | 00 |
| இருளும் ஒளியும் —எம். வி. வெங்கடராம் | 5 | 00 |
| வேள்வித்தீ — ,, | 6 | 00 |
| நித்தியகன்னி — ,, | 6 | 00 |
| தமிழ்நாட்டு நூற்றுரைகை 1964 பகுதி-3 | 2 | 67 |
| ,, 1965 | 1 | 32 |
| ,, 1966 | 1 | 72 |
| கைகளைத் தேடுகிறேன் —குருவிக்கரம்பை சண்முகம் | 2 | 50 |
| Nammalwar —A Srinivasa Raghavan | 2 | 50 |
| தமிழ்நாட்டு வரலாறு (தொல்பழங்காலம்) | 15 | 00 |
| நீ ஒரு பண்புத்தொகை —க. ப. அறவாணன் | 4 | 00 |
| கவிதை கிழக்கும் மேற்கும் —க. ப. அறவாணன் | 4 | 00 |
| இன்னிசை இருநூறு— அரசஞ் சண்முகனார் | | |
| —புலவர் ஆ. பொன்னுசாமிபிள்ளை உரையுடன் | 7 | 00 |
| சான்றாண்மை— அடிகளாசிரியன் | 10 | 00 |
| பாரதிதாசனில் புதிய பார்வை -புலவர் அ. அறிவொளி | 10 | 00 |
| பாரதப் பெருந்தலைவர் காமராஜ் | 10 | 00 |
| நாற்றங்கால் —எம். சுப்ரமண்யம் | 5 | 00 |
| சைவ சித்தாந்தம் —டாக்டர் முத்துராமன் | 5 | 00 |
| போராட்டங்கள் —ர. சு. நல்லபெருமாள் | 14 | 00 |
| நீல நயனங்கள் —நா. பார்த்தசாரதி | 20 | 00 |
| சுந்தரர் தரிசனம் —டாக்டர் ப. அருணாசலம் | 6 | 00 |
| சங்க இலக்கிய ஒப்பீடு | | |
| —டாக்டர் இராம பெரிய கருப்பன் | 14 | 00 |
| திரைகள் ஆயிரம் —சுந்தரராமசாமி | 3 | 75 |
| இலக்கியவானில் சிந்தாமணி —மு. வை. அரவிந்தன் | 4 | 00 |
| ஒரு ஊரின் கதை —வலம்புரி ஜான், எம்.ஏ., எம்.பி. | 2 | 50 |

பதிவு எண் : M. 4899



# பள்ளிமாணவர் பல்வகை நூல்கள்



அழகிய கண்ணாடி மரப் பேழையில்

4 தட்டுகள்

45 அட்டைப் பெட்டிகள்

321 நூல்கள்



பாட்டு—கதை—நீதி—கட்டுரை—நாடகம்—கவிஞர், புலவர், மேதையர், அறிவியல் அறிஞர், அரசியல் தலைவர், தொழிலும் கல்வியும் வளர்த்த தோன்றல்கள் முதலியோர் வரலாறுகள் தொகுப்புக்களாகக் கொண்ட நூல்கள் பல வண்ணப் பெட்டிகளில் வைக்கவும், எடுக்கவும், மீண்டும் வைக்கவும் எளிதாயிருக்க அழகுற அமைககப்பெற்றிருக்கின்றன.

கற்பவர் கண்ணைக் கவரும் பொலிவுமிக்க இப்பேழை பள்ளிவகுப்பு நூலகத்திட்டத்திற்கும், பொது நூலகங்கட்கும் கலைச்செல்வர் இல்லங்கட்கும் இன்றியமையாது வேண்டற்பாலது.

ரூ. 160 விலையுள்ள பேழை, ரூ. 50 விலையுள்ள 45 வண்ணப் பெட்டிகள் இவற்றோடு ரூ. 684-60 விலையுள்ள 321 நூல்கட்குக்

**குறைந்த விலை ரூ. 700/-**

*[3—12—1975 இல் தமிழகக் கல்வி அமைச்சர் மாண்புமிகு டாக்டர் நாவலர் அவர்கள் இதனை அறிமுகஞ் செய்துவைத்தபோது இது பள்ளிகளில் இடம் பெறுவதற்குத் தமிழரசு தக்கவாறு உதவிசெய்யும் என்று கூறினார்கள்.]*

சென்னையிலுள்ள கழகத் தலைமைநிலையத்திலும், திருநெல்வேலி, மதுரை, திருச்சி, கோயமுத்தூர், கும்பகோணம் ஆகிய ஊர்களிலுள்ள கிளைநிலையங்களிலும் இப்பேழை கிடைக்கப்பெறும்.

அப்பர் அச்சகம், சென்னை-1.